அவனால் ஆசையை அடக்க முடியுமா? (ஆம், உங்களாலும்தான் முடியாது)



# மோடிக்ராஸ்

(உத்திரவாதமுள்ள இழைகள்)

அந்த மோடிக்ரான் சட்டையைப்போல அப்பாவின்
பீரோவில் அதற்குமுன் அவன் எதனையுமே கண்டதில்லை
எனவே அதனை அணிந்து பார்க்க வேண்டும்
என்பதில் அவனுக்கு ஏற்பட்ட ஆர்வத்தை
அவனால் தவிர்த்துக் கொள்ள முடியவில்லை.

## ஷர்ட்டுக்கும்
## புஷ்-ஷர்ட்டுக்கும்
## உகந்த மோடிக்ரான்

துணிகளை தோய்த்தால் சுருங்காத, எவ்வளவு முறை
உடுத்தினாலும் மடிப்புக் கலையாத இந்த வண்ண உலகத்து
அற்புதம் ஆடைகளின் உடுப்பு பீரோக்களுக்குத்
தனியொரு உயர்வை அளிக்கிறது.

**மோடி ரேயான் அண்டு ஸில்க் மில்ஸ்**

உரிமையாளர்கள்

**தி மோடி ஸ்பின்னிங் & வீவிங் மில்ஸ் கோ., லிட்.**

மோடிநகர் (உத்திரப்பிரதேஷ்)



NF/MSW/5

சுபகிருது, மார்கழி 15உ



கல்கி

டிசம்பர் 30உ 1962

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## புசிக்கவும் ஆசை, புகைக்கவும் ஆசை ?




உயரிய பண்போடு
உபயோகிப்பதற்கும்
உதவுவதற்கும் உகந்தது

**பனாமா**

சம்பிரதாய விருந்துகளின்போது புகைபிடிப்பது இக் காலத்திலே விலக்கல்ல. வசதி அளிக்கப் பெற்றிருப்பின், உணவருந்தும் போது தாராளமாக நீங்கள் புகை பிடிக்கலாம். எங்கே சிகரெட் இடம் பெறவில்லையோ அன்றி வழங்கப்பெறவில்லையோ அங்கே நாமாக சொந்த சிகரெட்டைப் பற்றவைக்காமலிருப்பதே பண்பாட்டுக்கு அடையாளம்.

Panama
20
CIGARETTES

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டொபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

இழுக்க
இழுக்க
இன்பம்–
இறுதிவரை

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 612 TAM. Greens' Advtg.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 22

# ஆட்சித் தலைவர்

ராஜாஜி

பிரதம மந்திரி வேறு, மக்கள் அனைவரும் எல்லாக் கட்சிகளும் உள்பட்ட பாரத சமுதாயம் வேறு. அதிகாரத்திலுள்ள கட்சி வேறு, பாரத தேசம் வேறு. பார்லிமெண்டில் ஒரு கட்சிக்கு மெஜாரிட்டி இருப்பதால் மந்திரி பதவி பெற்றிருப்பவர்கள் தாங்களே ராஜ்யம் என்று எண்ணலாகாது. ஒரு குறிப்பிட்ட சமயத்தில் ஒரு குறிப்பிட்ட கட்சியும், பிரதமரும் அரசாங்கத்தை நடத்துவதால் அந்தக் கட்சியே சர்க்கார், அந்தப் பிரதமரே சர்க்கார் என்று நினைக்கக்கூடாது. மந்திரி சபைகளும், பிரதமரும் மாறலாம். ஆனால் அரசாங்கம் என்பது மாறாமல் நிரந்தரமாக நிற்கும் ஆட்சி அமைப்பு. மந்திரிகளுடைய கருத்துக்களின் மேல் அரசாங்கத்தின் முடிவுகள் உருவானாலும், அந்த முடிவுகளைக் கொண்டு பிறப்பிக்கும் உத்தரவு ராஷ்டிரபதியின் பெயரிலேயே வெளியிடப்படுகிறது. அரசாங்க உத்தரவுகளில் ராஷ்டிரபதியும், சர்க்காரின் நிரந்தரச் சிப்பந்திகளான காரிய தரிசிகளுமே கையொப்பமிடுகிறார்கள். பிரதமரின் பெயரிலோ மற்ற மந்திரிகளின் பெயரிலோ ஒருபோதும் உத்தரவுகள் வெளியிடுவதில்லை. இதற்கெல்லாம் காரணம் மேலே சொன்ன ராஜநீதியே.

இவ்வாறே, பார்லிமெண்டின் சபாநாயகர் மெஜாரிட்டி கட்சிக்கோ, மந்திரி சபைக்கோ பிரதிநிதியல்ல. ஆள்கிற கட்சியுடன் முரண்படும் எதிர்க்கட்சிகள் உள்பட சபை முழுவதற்கும் பொதுவாகச் சர்க்காரின் பிரதிநிதியாக அவர் செயலாற்றுகிறார். மேடையில் சபாநாயகருக்கு ஆசனம் அமைத்து, பிரதம மந்திரி உள்பட ஆள்கிற கட்சி அங்கத்தினர்களும் எதிர்க்கட்சி அங்கத்தினர்களும் ஒரே மட்டத்தில் அவருக்குக் கீழ் அமருவது இதைக் குறிப்பிடுவதற்குத்தான். மந்திரிகளுக்கு எதிர்க்கட்சிக்காரர்களைவிட உயர்ந்த இடம் கிடையாது. சபை நிகழ்ச்சியின் ஒவ்வொரு கணமும், அது விவாதிக்கும் ஒவ்வொரு விஷயத்திலும் எல்லாக் கட்சிகளும் சமமான வாய்ப்புக்களுடன் பங்கு எடுத்துக் கொள்கின்றன. சபையில் மெஜாரிட்டியாகவுள்ள கட்சியின் ஒரு குழு நிர்வாகப் பொறுப்பைப் பெற்றிருக்கிறது. இந்தக் குழுவைத்தான் மந்திரி சபை என்று சொல்கிறோம். மந்திரி சபையானது காலாட் படைக்கோ, கடற்படைக்கோ உத்தரவுகள் போட முடியாது. அரசாங்கம் முழுவதற்கும் சின்னமான ராஷ்டிரபதிதான் படைத்தலைவர். எந்த சர்க்கார் உத்தரவையும் சின்ன மந்திரிகளோ பிரதம மந்திரியோ கையெழுத்திட்டுப் பிறப்பிப்பதில்லை.

சர்க்கார் வேறு பிரதமர் வேறு என்ற பாகுபாடு மிகவும் முக்கியமானதாகும். ஜனநாயக ஆட்சி இந்தப் பாகுபாட்டின் மீதுதான் நிற்கிறது. இதை மறந்தால் அரசியல் நிர்ணயச் சட்டம் சிறிது சிறிதாகப் பாகுபாடு குன்றிச் சர்வாதிகாரத்தை நோக்கிச் செல்லும். மெஜாரிட்டிக் கட்சியைவிட மைனாரிட்டிக் கட்சிகள் தான் இந்தப் பாகுபாட்டில் அதிக கவனம் செலுத்த வேண்டும். இது வெள்ளிடைமலை.

ஆள்கிற கட்சியின் மெஜாரிட்டி பலம் எவ்வளவுக்கு அதிகமாக இருக்கிறதோ, அவ்வளவுக்கு இந்தப் பாகுபாட்டிலும் அதிக கவனம் செலுத்த வேண்டும். ஏனென்றால் இந்த மெஜாரிட்டி எண்ணிக்கை பலமே சர்க்காருக்கும் ஆள்கிற கட்சிக்குமுள்ள வித்தியாசத்தை மறைக்கிறது. ஆனபடியால் இந்தச் சந்தர்ப்பத்தில் எதிர்க்கட்சிகள் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும்; ஆளும் கட்சிக்காரர் தாங்களே அரசாங்கம்

என்று எண்ணிவிட எதிர்க் கட்சிகள் இடம் தரலாகாது.

ராணுவமும், பாதுகாப்புப் படைகளும் தேசம் முழுவதற்குமான சர்க்காருக்காகப் போராடுகின்றன. மெஜாரிட்டிக் கட்சிக்காக அல்ல. ராணுவமும், போலீஸும் அரசாங்கத்தின் பௌதிக பலத்தை வெளிப்படுத்தும் கருவிகள். எனவே இவற்றைப் பிரதம மந்திரியோடும், ஆட்சியில் உள்ள கட்சியுடனும் சம்பந்தப்படுத்தக் கூடாது. ராணுவம் ராஷ்டிரபதிக்கு அடங்கிச் செயலாற்றுவதாகவே புரிந்து கொள்ள வேண்டும். ராஷ்டிரபதிக்கும், நிரந்தர இலாகா அதிகாரிகளுக்கும் மட்டுமே ராணுவ மரியாதைகள் செலுத்த வேண்டும். பிரதமருக்கோ, பாதுகாப்பு மந்திரிக்கோ அல்ல. தேசியச் சடங்குகளையெல்லாம் ராஷ்டிரபதியுடனும், அந்தந்த ராஜ்ய கவர்னர்களுடனுமே சம்பந்தப்படுத்த வேண்டும்; ஒரு கட்சிக்குச் சார்புள்ளவர்களும், அதற்குக் கிடைத்த மெஜாரிட்டி பலத்தால் ஆதிக்கமும் பொறுப்பும் பெற்றவர்களுமான மந்திரிகளோடு ஒருகாலும் சம்பந்தப்படுத்தக் கூடாது. மந்திரிகள் ராஷ்டிரபதிக்கும் கவர்னருக்கும் யோசனை கூறுவதன் மேல் ராஷ்டிரபதியின் பெயரிலோ அல்லது கவர்னரின் பெயரிலோ தான் உத்தரவுகள் பிறப்பிக்க வேண்டும் என்பது நம் அரசியல் சட்டம். பெரும்பான்மையார் சிறுபான்மையார் எல்லாருக்கும் பாரதப் பாதுகாப்புப் படைகள் பொது என்பதைக் குழப்பத்துக்கு இடம் தராமல் காத்து வர வேண்டும். எந்தக் கட்சி ஆட்சிப் பொறுப்பை எடுத்துக் கொண்டாலும் சேனையும் போலீஸும் ஆட்சி பீடத்துக்குப் பக்தி செலுத்த வேண்டும்.

சம்பிரதாயங்களை அலட்சியம் செய்வது தவறு. மந்திரிகள் மிலிடெரி ஸல்யூட் பெறுவது அதிகார துராக்கிரகத்தின் ஒரு ரகமேயாகும்; அராஜகத்தில் ஒரு வகையைச் சேரும். பல ஆண்டுகளாக இப்படியெல்லாம் நடந்து வந்திருக்கிறது என்பதைக் காரணம் காட்டி அதனால் இனியும் இப்படியே நீடிக்க வேண்டும் என்று உரிமை கொண்டாட முடியாது.

இவ்விஷயத்தை மக்களின் கவனத்துக்கு நான் பலமுறை கொண்டு வந்திருக்கிறேன். மந்திரிமார்களுக்கு இவ்வளவு மரியாதையா என்று நான் மனக் கசப்புக் கொண்டு இதைச் சொல்லவில்லை. அநுசிதமான காரியமாயிற்றே என்பதால்தான் இதைக் கண்டிக்கிறேன். அநுசிதம் என்பதோடு இதில் இருக்கும் ஆபத்துக்களையும் காண்பதால் கண்டிக்கிறேன். அரசியல் நிர்ணயச் சட்டத்தை நாம் பின்பற்ற வேண்டும். ஜனநாயக அமைப்பில் உள்ள எல்லா அரசாங்கங்களின் நடைமுறையையும் நாம் பின்பற்ற வேண்டும். என் ஆட்சேபணைக்கு இதுவே காரணம்.

சர்க்காரின் பாதுகாப்பு முயற்சிகளுக்கு ஆதரவு தரவேண்டும் என்று கோரும் சுவரொட்டிகளில் ராஷ்டிரபதியை மறந்துவிட்டுப் பிரதமர் அவர்களைப் பெரிதாகச் சித்திரித்து விளம்பரப்படுத்தியிருப்பதை ஆசாரிய ரங்கா அவர்கள் ஆட்சேபித்திருப்பதும் இதே காரணத்துக்குத்தான். இதுபோன்ற விஞ்ஞாபனங்கள் ராஷ்டிரபதியின் பெயரில்தான் இருக்கவேண்டும். சித்திரங்கள் அவசியமாகத் தோன்றினால் ராஷ்டிரபதியின் உருவத்தைத்தான் சித்திரிக்க வேண்டும். அவர்தான் கட்சிச் சார்பற்ற முறையில் சர்க்காருக்கும் தேசத்துக்கும் சின்னமாக இருக்கிறார். எல்லாச் சேனைகளுக்கும் அவர்தான் அதிபதி. ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்கள் ராஷ்டிரபதி ஸ்தானத்தை வகிக்க முற்றிலும் தகுதி பெற்றவர். அவரே அதற்குத் தகுந்தவர் என்றும் சொல்லலாம். ஆனால் இரண்டு பதவிகளையும் ஒருவர் வகிக்கப் பார்ப்பதுதான் கூடாது. மந்திரி ஸ்தானத்தை விட்டு விட்டு ராஷ்டிரபதியாவதற்கு அவர் சம்மதித்தால் அதைப் போன்ற நல்ல யோசனை வேறில்லை. கட்சி வேற்றுமையற்ற பாரத மக்கட் சமூகத்துக்குச் சின்னமாக இருக்கும் பதவி ராஷ்டிரபதி பதவி.

சம்பிரதாயங்களை ஒழுங்காக அநுசரிப்பதால் யாருக்கும் எந்த நஷ்டமும் கிடையாது. ஜனநாயகக் கொள்கைகளைத்தான் நாம் வலுவாக்க வேண்டுமே ஒழிய ஒரு பெரிய மனிதருக்கே பக்தி செலுத்தி நிரங்குச தேசத் தலைமையை அவருக்கு அளித்துவிடுவது முறையல்ல.

தேசக் கொடியும் இதே போல் இன்னொரு முக்கியமான விஷயம். சுதந்திரப் போராட்டத்தின் போது தேசக் கொடி எப்படி இருக்க வேண்டும் என்பதை விவாதித்தோம். மூவர்ணமும் ராட்டையும் கொண்ட காங்கிரஸ் கொடியே தேசக் கொடியாகவும் இருக்க வேண்டும் என்று காந்திஜி விரும்பினார். சுதந்திரம் பெற்றவுடன் காங்கிரஸ் ஸ்தாபனத்தைக் கலைத்துவிட வேண்டும் என்று அவர் எண்ணியபடியால் காங்கிரஸ் கொடியே அதன் பின் தேசக் கொடியாக வேண்டுமெனக்கூறினார். ஆனால் நாங்கள் எல்லோரும் காங்கிரஸ் கட்சியைக் கலைக்கக்கூடாது, பார்லிமெண்ட் முறைக்குக் கீழ் அதுவே அரசாட்சியை ஏற்க

வேண்டும் என்று சொன்னேம். அதன் மேல் அவரும் அரை மனத்துடன் மாற்றுத் தேசக் கொடி வைத்துக்கொள்ள ஒப்புதல் அளித்தார். காங்கிரஸ் கொடியின் அதே மூவர்ணங்களுடன், ராட்டைக்குப் பதில் சக்கரத்துடன் தேசக் கொடி இருக்கலாம் என்ற யோசனைக்கு இணக்கம் தந்தார். இவ்வாறு நாங்கள் காந்திஜியை அரை மனதாக இணங்க வைத்தது எவ்வளவு தவறு என்று இப்போது நான் காண்கிறேன். இந்த யோசனையை நான் ஆதரித்துப் பேசியது பிசகு என்று உணருகிறேன். காங்கிரஸ் கொடியையே தேசக் கொடியாக்கி விட்டு ஸ்தாபனத்துக்கு நாங்கள் வேறு கொடி தேர்ந்தெடுத்திருக்க வேண்டும். இதைச் செய்யத் தவறினேம். அதை யெல்லாம் எண்ணி இப்போது வருத்தப்படுவதில் பயனில்லை. இப்போது செய்ய வேண்டியது என்னவென்றுல், தேசக் கொடியிலிருந்து தெற்றென மாறுபடும் ஒரு புதுக் கொடியைக் காங்கிரஸ் கட்சி தேர்ந்தெடுக்க வேண்டும். அல்லது தேசக் கொடியை ஒரே வர்ணமாக்கி அதில் சிம்மங்கள் கொண்ட அசோக ஸ்தூபியைப் பொறிக்கலாம். கொடி வேறு, சர்க்கார் முத்திரைச் சின்னம் வேறு என்ற பிரிட்டிஷ் பரம்பரை ஏற்பாட்டை நாம் பின்பற்ற வேண்டிய அவசியம் இல்லை. பிரிட்டனில் இந்த வழக்கம் ஏற்பட்டதற்குப் பிரத்தியேகக் காரணம் உண்டு. அது நம் நாட்டுக்குச் சம்பந்தமில்லை. நம் நாட்டில் இரண்டும் ஒன்ருகவே இருக்கலாம். அணிவகுப்பின் போதும், தேசிய விழாக்களிலும், அரசாங்கக் காரியாலயங்களிலும் அசோக ஸ்தூபி உள்ள தேசக் கொடியையே ஏற்றி வைக்க வேண்டும். மூவர்ணமும் ராட்டையும் கொண்ட கொடியையே காங்கிரஸ் ஸ்தாபனம் நீடிக்கலாம். கொடி விஷயத்தில் குழப்பத்தைத் தீர்க்க இவற்றில் ஏதேனும் ஒன்று செய்தாக வேண்டும்.

சர்க்காரும், ஆளும் கட்சியும் ஒன்று என்ற குழப்பம் நீங்க வேண்டும். ராஷ்டிரபதி, பிரதமர் இவர்களுடைய ஸ்தானமும் காரியக் கிரமங்களும் அரசியல் சட்டப்படி வரையறையாகி, அநுசரிக்கப்பட வேண்டும். பத்ததிகளும் சம்பிரதாயங்களும் முக்கியமானவையல்லவென்று நினைக்கலாகாது. அவை அரசியல் முறைக்கும் நீதிக்கும் காப்பாகும்.

## ஊர் வம்பு:



# வழி ஒன்றுதான்!

மேல் நாட்டு வல்லரசுகளுடன் உறுதியான ஒப்பந்தம் செய்து கொள்ளாவிடில் நம்முடைய ராணுவச் செலவுகள் எக்கச்சக்கமாக வரம்பின்றி உயரும்; இந்தச் செலவை ஈடுகட்ட மேலும் வரிகள் விதித்தாலோ, ரூபாய் நோட்டுக்கள் அச்சிட்டாலோ ஏழை மக்களுடைய கஷ்டங்கள் அதிகரிக்கும். இந்த உண்மையை வெளியிடுவது சர்க்காரின் யுத்த முஸ்தீபுகளுக்குக் குந்தகமாகும் என்று சில வறட்டுக் கொள்கைக்காரர்கள் கருதுகிறார்கள். இது மிகவும் தவறான கருத்தாகும்.

வரி உயர்வையும், பற்றாக்குறை பட்ஜெட்டையும் தற்போது எதிர்க்காவிட்டால்தான் பிற்பாடு நமது போர் முயற்சிகளுக்கு ஊறு விளையும். சீனாவுக்குச் சமமாக நம் ராணுவத்தைப் பலப்படுத்த வேண்டுமானால் அதற்குத் தேவைப்படும் நிதி கொஞ்ச நஞ்சமல்ல. மேல் நாடுகளின் உதவியை நாம் ஸ்திரப்படுத்திக்கொள்ளாமல் வரிகளின் மூலம் சமாளித்துக் கொள்ளலாம் என்று நினைப்பது அறியாமை. ஏழை இந்தியா மேலும் நொடித்துப் போய்விடும். நம் மக்களின் சராசரி வருமானத்தைக் கொண்டு நோக்கினால் தற்போது விதித்துள்ள வரிகளே அளவு மீறியவை; பணவீக்கத்தால் தற்போது ஏற்பட்டுள்ள விலை உயர்வே தாள முடியாதது. இந்த நிலைமையை இன்னும் உக்கிரமாக்கினால் மக்களின் அதிருப்தியும் மனக் கசப்பும் அதிகமாகி அவர்கள் மனோ தைரியம் இழப்பார்கள். முடிவடையக்கூடிய யுத்தத்துக்கு ரத்தமும், வியர்வையும் சிந்த மக்கள் தயார். இப்போது ஏற்பட்டிருப்பதோ நிரந்தர ஆபத்து. அதற்குப் போதிய பலத்தைத் திரட்டிக்கொள்ள வேண்டும். வல்லரசுகளின் நட்பே பெரிய பலமாகும். நம் நாட்டு ஏழை மக்கள் வயிற்றையும் வாயையும் முடிவின்றிக் கட்ட நேர்ந்தால் எப்படிப் பலத்துடன் எதிரியுடன் போரிட முடியும்? சீனாவின் பலத்துக்குச் சரியாக நாம் பலம் பெறுவது வரிகள் மூலம் நடவாது. எனவே இந்த நிரந்தர ஆபத்தில் நமக்குள்ள ஒரே வழி மேல் நாட்டு வல்லரசுகளின் நட்புதான். அப்போதுதான் சீனா நம்மிடம் வாலாட்டத் தயங்கும். அப்படியே வாலாட்டினாலும் அந்நிய உதவியுடன் நாம் அதை வெற்றி கொள்ள முடியும். வரிப் பணத்தைக் கொண்டு நிரந்தர ஆபத்தைத் தீர்க்கும் உபாயங்களைத் தேடுவது அறிவுடைமையாகாது.

## வெற்றி கொள்வோம்!

என். எஸ். சிதம்பரம்

வெஞ்சமர்க்கும் அஞ்சாத வீரமுள்ளோர் என்றே
வெறிபிடித்த சீனரையே வெற்றிகொள்வோம் இன்றே!
துஞ்சுதலே அறியாத தொன்மறவர் நாமே!
துள்ளுபகை பறவாகை சூடுபவர் நாமே!

மண்ணாசை நிறைசீன மாற்றாரை யழிப்போம்!
மகிமைநிறை பாரதத்தாய் மனமகிழச் செழிப்போம்!
புண்ணான தருணமிதைப் புரிந்துசெயற் படுவோம்!
பொல்லாத சீனவிடப் பூண்டறவே கடுவோம்!

சீலமுற்றும் மறந்தவரைச் சினந்து முறியடிப்போம்!
செம்மையுற்ற நமதெல்லைச் சீர்க்கோட்டைப் பிடிப்போம்!
காலமதில் அறம்வெல்லக் காண்பவரும் நாமே!
காந்திநெறி யேந்திநிற்கும் சாந்தியரும் நாமே!

தாய்சக்தி மாகாளி தன்கண்ணை விழிப்பாள்!
தாவிவரும் கனற்பார்வை தனிற்பகையை யழிப்பாள்!
வாய்த்திடுமே அவள்துணையால் வல்லவெற்றி நமக்கே!
வாட்டமின்றிப் போர்செய்வோம்! வான்புகழும் நமக்கே!

ஆக்ரமிக்கும் எதிரிகளை அடியோடே ஒறுப்போம்!
ஆணவஞ்சேர் சீனாவின் அழிசெயலை வெறுப்போம்!
சாக்ரதைசேர் இந்தியர்நாம் சத்தியத்தால் வெல்வோம்!
தக்கபடை பலம்பெருக்கித் தருமத்தால் வெல்வோம்!

புதிய சூத்திரம்!




சீனச் சிலந்தி!




வேட்டை நாயா? வேங்கைப் புலியா?



# என்ன சேதி?

### கூட்டுச் சேராக் கொள்கை

பாரபட்சமில்லாமல் நியாயத்தை எடுத்துச் சொல்வதே உலக வல்லரசுகளின் பூசலில் எந்தச் சார்பிலும் சேராக் கொள்கை (Non-alignment) என்று ராஷ்டிரபதி அவர்கள் சமீபத்தில் வியாக்கியானம் செய்தார்கள். பட்சபாதமில்லாமல் சத்தியத்தைக் கடைப்பிடிக்கும் கொள்கையை யாருமே வரவேற்க வேண்டியதுதான். ஆனால் நடைமுறையில் இப்படிக் காணவில்லை. சார்பற்ற கொள்கையை அநுசரிப்பவர்கள் என்று சொல்லிக் கொண்டு கொழும்பில் கூடிய தலைவர்கள் பயமும் பட்சபாதமுமில்லாதவர்களாகக் காணப்படவில்லை.

டாக்டர் ஹோ—சி—மின் கூறிய சமாதான யோசனையைப் பார்த்து, "தீர்க்கமாகத் திட்டமிட்டே சீனர்கள் இந்தியா மீது ஆக்கிரமிப்பு செய்திருக்கிறார்கள்" என்று நேருஜி அவருக்கு எழுதியிருக்கிறார். இந்த உண்மையைப் பாரபட்சமில்லாமல் எடுத்துக் கூறி நியாயம் தேடுவதற்குக் கொழும்பில் கூடிய 'சார்பற்ற' நாடுகளுக்கு ஏன் மனமில்லை? ராஷ்டிரபதி கூறுவதுபோல் எந்தப் பட்சமும் சேராமை என்ற தத்துவம் சத்தியத்தை உள்ளபடி ஆராய்ந்து தீர்மானிக்கும் மனப்பான்மை எனில், கொழும்பு மகாநாடு ஏன் ஆக்கிரமிப்பாளரைக் கண்டிக்கத் தயங்க வேண்டும்? யார் பக்கம் பேசினால் என்ன நேர்ந்துவிடுமோ என்ற அச்சத்தில் மதில் மேல் பூனையாகப் பேசித் தப்பித்துக்கொள்வதுதான் இன்று 'நடுநிலை'க் கொள்கையாகப் பெரிய பெயரில் உலவி வருகிறது.

இமய மலைச் சாரலில் நிரந்தரமாக நிலைத்துவிட்ட பேராபத்தைத் தடுக்க மேல் நாட்டு வல்லரசுகளுடன் 'கெட்டி'யான உடன்படிக்கைதான் இன்று தேவை. துவைதாத்வைத தத்துவ ஆராய்ச்சிகள் இந்தச் சந்தர்ப்பத்தில் பயனில்லை.

### தொழிலாளர் பெருமக்களுக்கு!

நம் நாட்டிலுள்ள தொழிலாளர்கள் விழிப்புற வேண்டிய சந்தர்ப்பம் வந்துவிட்டது. தேச பக்தர்களும், தலைவர்களும் நம்பாத கம்யூனிஸ்டுகளுடன் அவர்கள் கொண்டுள்ள தொழிற் சங்க உறவுகளை உதறிவிடவேண்டும். தொழிற் சங்கத் தலைவர்கள் முன்பு ஆற்றிய பணிகளுக்கு அவர்கள் நன்றி கொள்ள வேண்டியதுதான். எனினும் நாட்டைக் கவர முயன்ற எதிரியின் அரசியல் கொள்கையைப் பின்பற்றுபவர்களின் தலைமையை நம் தொழிலாளர்கள் ஏற்கலாகாது. நம்முடைய தொழிலாளர் சமூகம் தேச பக்தியில் உயர்ந்தது. நமது தொழிலாளர்களுடைய பகுத்தறிவும், விஷயங்களை உணரும் புத்தி நுட்பமும் அவர்களுடைய தேச பக்திக்குக் குறைந்ததல்ல. இவற்றையெல்லாம் அவர்கள் நிரூபித்துக் காட்டத் தக்க தருணம் வந்துவிட்டது. வெளியாரின் தலைமையின்றி அவர்கள் தங்களுடைய சங்கங்களைத் தாங்களே நிறுவி நடத்திக் கொள்ள வேண்டும்.

அட்டைப்பட விளக்கம்

## நிலவில் ஒரு நங்கை!

பனிக்காலத்து வான மண்டலமும், பிறைச் சந்திரனும் யாருக்குமே உல்லாசத்தையும் உற்சாகத்தையும் ஊட்டும். அதிலும் காதல் வயப்பட்டவர்களின் எண்ணங்களும் உணர்ச்சிகளும் சிறகடித்துக்கொண்டு பறக்கத் தொடங்கிவிடும்.

சித்திரக் கலைஞர்களும் கவிஞர்களும் காதலர்களின் எண்ணங்களுடன் போட்டி போட்டுக்கொண்டு தங்கள் கற்பனையை ஏவிவிடுவார்கள்.

மாதர் முகத்தை நினைக்கிணை கூறுவர்
வெண்ணிலாவே! — அஃது
வயதிற் கவலையின் நோவிற் கெடுவது
வெண்ணிலாவே!
காத லொருத்தி இளைய பிராயத்தள்
வெண்ணிலாவே! — அந்தக்
காமன்றன் வில்லை யிணைத்த புருவத்தள்
வெண்ணிலாவே!

என்று பாடினார் பாரதியார். நடைமுறை உலகில் காணும் நங்கையர் வயதிலும், கவலையிலும், நோவிலும் தேசு குன்றலாம். ஆனால் ஓவியர் ராமு தீட்டியுள்ள இந்த மங்கையோ என்றும் மங்காத நிலவாகவே இருப்பாள் அல்லவா?


EVEREST
EVEREST

# உணவு

## நமது பாதுகாப்பின் ஜீவநாடி

நாட்டின் பாதுகாப்பு முயற்சிக்கு தடையில்லாத உணவு சப்ளை ஜீவநாடியாகும். உணவு முனையில் வெற்றி யடையவேண்டியது ஒவ்வொருவருடைய கடமையாகும். உற்பத்தியை அதிகரியுங்கள். அதிகம் சேமியுங்கள். வீண் வியர்த்தத்தைக் குறையுங்கள்.



- வீட்டில் சிக்கனத்தை கடைப்பிடியுங்கள். ஒரு சில உணவு இருந்தால் போதும். வீண் வியர்த்தத்தைத் தவிருங்கள். ஒவ்வொரு குடும்பப் பெண்ணும் இதை நன்கு உணரவேண்டும்.
- திருமணம் மற்றும் இதர நிகழ்ச்சிகளில்-மதம் அல்லது சமூகம் எதுவாக இருந்தாலும் சரி - சிக்கனத்தைக் கடைப்பிடித்து கண்டிப்பாக நடந்து கொள்ளுங்கள்.
- அவசியமானபோது மட்டிலும் விருந்து அளியுங்கள். படாடோபமில்லாமல் உணவு பரிமாறுங்கள்.
- காய்கறிகள், பழம், மீன், இறைச்சி, முட்டைகள், பால் பொருள்களை சேர்த்துக்கொண்டு உணவை சமனமாக்கிக் கொள்ளுங்கள். தானியங்கள் முக்கியமாக கோதுமை, அரிசி உணவைக் குறைத்துக் கொள்ளுங்கள்

**உணவை** மிச்சப்படுத்துங்கள்

**நாட்டின் பலத்தை காப்பாற்றி வையுங்கள்**

உணவு விவசாய அமைச்சகத்தால் வெளியிடப்பட்டது

# மாதர் மன்றம்



"நேற்றைக்கு வந்திருந்தேன். நீங்கள் வீட்டில் இல்லை. தனுர் மாத பஜனை என்று மயிலாப்பூருக்குப்போயிருப்பதாகச் சொன்னார்கள். நான் திரும்பிப் போய்விட்டேன். விடியற்காலை பஜனை என்றால் சுடச் சுடப் பொங்கலும் கிடைக்குமோ மாமி?" என்று கேட்டாள் சுபத்ரா.

"பொங்கல் மட்டுமா? வடை, பாயசம் கூட ஆறு மணிக்குள்ளேயே கிடைக்கும்!" என்று மங்களம் மாமி கொஞ்சம் அசடான அலமேலு மாமி பக்கம் பார்த்து, "போகிறீர்களா?" என்றாள். அந்தப் பழி தன்னையும் சேர்ந்துவிடப் போகிறதே என்று அவசரமாக, "நான் போனது ஏகாதசியன்றைக்கு! சுவாமிக்கு வெறும் பழமும், பாயசமும்தான் நைவேத்தியம்" என்று கூறி முடித்தாள் மங்களம் மாமி.

"எல்லாருக்கும் படி அளக்கும் ஆண்டவனுக்கு எதற்காக நைவேத்தியம் செய்கிறோமோ?" என்று கேட்டாள் நவநாகரிக யுவதி சுலோசனா.

"நமக்குப் படி அளப்பவன் அவன்தான் என்று நினைவூட்டிக் கொள்வதற்குத்தான் அவனுக்குக் காட்டிவிட்டுப் பிரசாதமாகச் சாப்பிடுகிறோம். இப்படியேதான் லக்ஷ்மிபதியான அவனுக்கு நகையும் நட்டும் செய்து போடுவது அவனுக்காக இல்லை; அந்த அலங்காரத்தில் அவனைப் பார்க்கும் போது நம் மனசு கொள்ளும் ஆனந்தத்துக்காகவும் அந்தக் கோலத்தில் அவனிடம் நம் எண்ணம் சுலபமாகப் பதிவதாலும்தான்" என்று விளக்கினாள் மங்களம் மாமி.

உடனே சுலோசனா ஏதோ நினைவு வந்தவளாக "யாரோ ஒருத்தர் பத்து ஆயிரம் ரூபாய் நோட்டுகளைத் திருப்பதி உண்டியிலே போட்டார்களாம்! அவர்களுக்கு எவ்வளவு புண்ணியம் சேர்ந்திருக்கணும்....! ஆனால் அந்தப் பணம் போட்ட பலனே போட்டவர்களுக்குக் கிடைக்காது என்று திருப்பதி கோவில் பெரிய அதிகாரி கூறி விட்டார்!" என்றாள்.

"என்ன? என்ன?" என்று எல்லாரும் வியப்போடு கேட்டார்கள்.

"அந்த ஆயிரம் ரூபாய் நோட்டுக்கள் செல்லாது என்று ரிஸர்வ் பாங்கி அதிகாரிகள் கூறிவிட்டார்கள். அதைப் போட்டவர்கள் யாரோ, அவர்கள் தெரிந்து கொள்ளட்டும் என்று கோவில் அதிகாரி பத்திரிகைக்காரர்களிடம் சொல்லி விட்டார்!" என்றாள்.

"போட்டவர்களுக்கு அந்த ஆயிரம் ரூபாய் நோட்டுச் செல்லுமா, செல்லாதா என்பது தெரியுமோ தெரியாதோ!" என்றாள் மங்களம் மாமி.

"செல்லாது என்று தெரிந்து கொண்டிருந்தால் அது பெருமாளை ஏய்ப்பதாகும்!" என்றாள் சுபத்ரா.

"அப்படி யாரும் வெங்கடாசலபதியிடம் நடந்து கொள்ள மாட்டார்கள்" என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

"இந்தக் காலத்திலே ஒன்றும் சொல்வதற்கில்லை, அம்மா...!" என்று மிகவும் கவலையோடு சொன்னாள் மங்களம்மாமி.

"காலத்தின் தலையில் ஏன் பழியைப் போடுகிறீர்கள்? ராமன் இருந்த காலத்தில்தான் ராவணனும் இருந்தான்; தர்மபுத்திரர் இருந்த காலத்தில்தான் துரியோதனனும் இருந்தான்!" என்றாள் சுபத்ரா.

"வாஸ்தவம்தான். இந்தக் காலத்திலேயே எவ்வளவு உயர்ந்த பண்புள்ள மனிதர்கள் இருக்கிறார்கள் தெரியுமா! சொன்னால் கதை என்பீர்கள். உண்மையாக நடந்த சமாசாரம். பத்திரிகையில் கூடச் செய்தியாக வந்தது. சொல்லட்டுமா?" என்றாள் சுலோசனா.

"சொல்லேன்!" என்றார்கள்.

"டில்லியில் ஓர் அமெரிக்கப் பத்திரிகை நிருபர் டாக்ஸியில் போய்க்கொண்டிருந்தார். எதிரில் ஒரு டாக்ஸி வந்தது. உடனே அதை நிறுத்தி அந்த டாக்ஸி டிரைவரின் கையில் முந்நூறு ரூபாயைச் செருகினாராம் நிருபர். அந்த டாக்ஸியோட்டியோ, 'வேண்டாம், வேண்டாம்' என்று எவ்வளவோ மறுத்தும் கேட்காமல் முந்நூறு ரூபாயைக் கொடுத்துத்தான் தீருவேன் என்று சொல்லிக் கொடுத்தாராம்."

"அடிமுடி இல்லாமல் இப்படிச் சொன்னால் யாருக்கு என்ன புரிகிறது? சற்று விவரமாகத்தான் சொல்லேன். ஏன் அப்படிச் செய்தாராம் அந்த அமெரிக்க நிருபர்?" என்று கேட்டாள் அலமேலு மாமி.

"அவர் சில நாட்களுக்கு முன் டில்லிக்கு வந்திருக்கிறார். வந்தவர் ஒரு டாக்ஸியில் எங்கெல்லாமோ சுற்றி விட்டுப் பாலம் விமான நிலையத்திலிருந்து பாகிஸ்தானுக்குப் போனாராம். அங்கு போன பிறகுதான் தம்முடைய கைப்பை எங்கோ தொலைந்து விட்டது தெரிந்தது. அதில் இந்தியப் பணம், அமெரிக்க டாலர்கள், மற்றக் காகிதங்கள், தஸ்தாவேஜுகள் எல்லாமாகச் சேர்ந்து ரூ. 15,000 மதிப்புக்கு இருந்தனவாம். மீண்டும் டில்லிக்கு வந்தவர் அமெரிக்கத் தூதராலயத்துக்குப் போனார். அங்கு அவருடைய பை, (அதில் வைத்த சாமான்கள் வைத்தபடி) இருந்தது. அவர் அன்று சுற்றிக் கொண்டிருந்த டாக்ஸியின் டிரைவர் கொண்டு வந்து கொடுத்ததாகத்



துாதராலயத்தினர் கூறி னர்!" என்றாள் சுலோசனா.

"ஓ! அதற்குத்தான் திருடர் மூந்நூறு ரூபாய் பரிசு கொடுத்தாரா அந்த டாக்ஸி டிரைவருக்கு!" என்றாள் அலமேலு மாமி.



"அவர் கொடுக்க நினைத்ததோ கொடுத்த பணமோ பெரிதில்லை மாமி! அவ்வளவு பெரிய தில்லிப் பட்டணத்திலே, டாக்ஸி டிரைவரை நான் முழுதும் தேடித் தேடிக் கண்டு பிடித்தாரே, அந்தக் குணத்தைச் சொல்லுங்கள்" என்றாள் சுலோசனா.

"ஆமாம், அமெரிக்காவிலிருந்தெல்லாம் யுத்தச் செய்தி சேகரிப்பதற்கு நிறைய நிருபர்கள் வந்திருக்கிறார்கள் இல்லே?" என்று பேச்சைத் திருப்பிய அலமேலு அம்மாள், "ஆமாம், சீனாக்காரன் என்ன சொல்கிறான்?" என்று ஆரம்பித்தாள்.

அலமேலுவுக்கு யுத்தச் செய்தி அறிவதில் மிகுந்த ஆர்வம். பத்திரிகை படிக்கிற வழக்கமும் கிடையாது; நேரமும் கிடையாது. அதனால் இந்த மாதர் மன்றத்திலேயே செய்திகளைத் திரட்டிக் கொண்டு போக முயல்வாள். அப்போது அவளுக்குமே ஒரு சாமர்த்தியம் வந்து விடும்.

"சீனக்காரன் என்ன சொல்கிறான் என்கிறீர்களே! தமிழிலேயே உத்தரவுகள் சொல்லிருக்கும்" என்று சுலோசனா 'இரீச்'சென்று கத்தினாள்.

"இதென்னமா கூத்தாக இருக்கு!" என்றாள் அலமேலு மாமி.

"நம்ம துருப்புகளை ஏய்ப்பதற்காகச் சீனக்காரன் தமிழிலே உத்தரவுகள் பிறப்பித்து நம்ம தமிழ் வீரர்கள் ஏதோ தங்கள் நண்பர்களிடமிருந்துதான் உத்தரவு வருகிறது என்று நம்பச் செய்து ஏமாற்றப் பார்த்தார்களாம்!" என்றாள் சுலோசனா.

இதைக் கேட்ட அலமேலு மாமி வியப்பில் திறந்த வாய் மூடவில்லை.

"சீனக்காரன் புரியும் ஏமாற்றுக் காரியங்கள் ஒன்று இரண்டா! அவர்கள் புத்த பிட்சு மாதிரி வேஷம் போட்டுக் கொண்டு வந்து திடீரென்று துப்பாக்கியை நீட்டுகிறார்களாம்" என்றாள் சுலோசனா.

"ஈக்கும் எறும்புக்கும் கருணை காட்டிய புத்தரின் வழிவந்தவர்களின் வேடத்தில் நயவஞ்சகக் கொலைகாரர்களா? என்ன அக்கிரமம்!" என்றாள் மங்களம்.

"அப்புறம் கேளுங்கள். 'ப்ரெயின் வாஷிங்'னு சொல்வா. அந்த மாதிரி, பிடிபட்ட இந்திய சிப்பாய்களை மயக்க வைத்து விஷயங்களைச் சேகரிக்கிறானும் சீனக்காரன். போதை தரும் மாத்திரையைக் கொடுத்து ஜவான்களை மயங்க வைத்து அந்தச் சமயத்திலே சினிமோட யுத்த கீதங்களைத் திரும்பத் திரும்பப் பாடி அவர்களோடே மனசைப் பேதலிக்க வைக்கிறார்களாம்" என்று வேதனையுடனும், கவலையுடனும் கூறினாள் சுபத்ரா.

"போதை என்றவுடனே நினைவு வரது. மதுவிலக்கை ரத்து பண்ணிடலாம்னு சில சர்க்காருங்க சொல்றாங்களாமே!" என்றாள் மங்கையர்க்கரசி.

"எப்படியும் நம்ப முதல் மந்திரிதான் அதை எதிர்க்கிறாரே! அதுவுமில்லாமல் நமக்கு உள் நாட்டு 'பாலிடிக்ஸ்' வேண்டாம் மாமி" என்று சுலோசனா இடி இடி என்று சிரிக்கலானாள்.

"என்னடி சமாசாரம்?" என்று ஆவலாகக் கேட்டாள் மங்களம்மாள்.

"சமீபத்திலே ஒரு 'ஜோக்' படிச்சேன். 'தண்ணீர்' போட்டு விட்டு இரவு வீடு திரும்பிய ஒருவர் தாம் யார், தம் குடை எது என்பதையே மறந்து, படுக்கையில் தம் குடையைச் சயனிக்க வைத்துத் தாம் குடையிருக்க வேண்டிய மூலையில் போய் நின்று கொண்டாராம்" என்றாள் சுலோசனா.

"அது சரி! நாம இன்னமும் பேசிக் கொண்டேயிருந்தா நமக்கெல்லாம் கொடுக்க மங்களம்மாளிடமே குடை கிடையாது. வானம் மூடிக் கொண்டு வரது. கிளம்பலாம்" என்றாள் மங்கையர்க்கரசியம்மாள்.

ராணுவச் செலவுகளை ஈடு செய்வதற்காக மதுவிலக்கை ரத்து செய்ய வேண்டும் என்று காங்கிரஸில் பரவலான அபிப்பிராயம் நிலவுகிறது.

# தற்போது...

கமகமவென்று

புதிய 


# நறுமணம்

கமழுது **ரெக்ஸோனா**

கமகமவென்று புதுமணம்பூண்டு வருகிறது உங்கள் ரெக்ஸோனா சோப் ... அரிய அழகுத் தைலங்கள் இணைந்துள்ள ரெக்ஸோனாவினால் உங்கள் சருமத்திற்கு நாளொரு மேனியாக அதிக வனப்பு!




கேடில் அடங்கிய
புதிய ரெக்ஸோனா
...உங்கள் சருமத்திற்கு அனுகுணமானது

**கேட்டீரா, ரெக்ஸோனா பாடல்?** கீதா தத் பாடியது, ஸலில் சௌத்திரி இசையமைத்தது.
காதுகுளிரக் கேளுங்கள் உங்களுக்கு இஷ்டமான சினிமாக் கொட்டகையிலே!

இந்துஸ்தான் லீவர் லிமிடெடினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது. R.P.10-X52 TAM

# மாறும் உலகில் மாறாதது...!

வனபுல

'சுஜூரி சந்தேஷ்' என்னும் அந்த இனிப்பைச் சாப்பிட்டதும் என் வாய் வெம்பாகக் கசந்தது. பண்டம் நன்றாயில்லை என்பதனால் அல்ல. ஆரம்பத்திலிருந்தே சொன்னால்தான் உங்களுக்குப் புரியும்.

ஹரி மோகன் பெரிய பணக்காரன். பணத் தட்டு என்பதே அவனுக்குக் கிடையாது. நல்ல சிகிச்சை தரப்படவில்லை என்பதனாலோ, கவனிப்பில் குறைபாடு கண்டது என்பதனாலோ அவன் சாகமாட்டான் என்ற திட நம்பிக்கை எனக்கு உண்டு.

பணம் கொடுத்து எத்தனை சிகிச்சை பெற முடியுமோ, அத்தனையும் அவன் விஷயத்தில் பெறப்பட்டது. புகழ் பெற்ற இரு டாக்டர்கள் காலை மாலை இரண்டு வேளையும் அவனைப் பார்த்துப் போக வந்தனர். அவனது பணிக்கென்றே இரண்டு நர்ஸ்கள் வேறு நியமிக்கப்பட்டிருந்தனர். இவ்வளவு இருந்தும் ரமாவின் மனம் கேட்கவில்லை. அவளே அவனை மிகவும் கருத்தோடு கவனித்து வந்தாள். அவள் போல் பணிவிடை புரிய நர்ஸுகளினாலும் ஆகாது என்று டாக்டர்களே சொல்லி விட்டார்கள் என்றால் அதற்கு மேல் சொல்ல என்ன இருக்கிறது? என்ன தான் ஆனாலும் காசுக்கு வேலை செய்யும் நர்ஸுகள் அத்தனை உண்மையான மனத்துடன் தொண்டு செய்வார்களா?

ஆனால் அவனுக்கு வந்திருந்த நோய் மிகப் பயங்கரமானது. காச நோய். இருமினால் ரத்தம் கூட வந்தது. நாளுக்கு நாள் ஜுரம் வேறு அதிகரித்துக் கொண்டே போயிற்று. அவன் எச்சிலைப் பரிசோதித்துப் பார்த்ததில், அதில் காச நோய்க் கிருமிகள் காணப்படுவதாகக் கூடக் கண்டிருந்தது. எனவே, நோயைப் பற்றி இதுவா, அதுவா என்ற ஐயம் எழ நியாயமில்லை. பணக்காரனதலால், அவனுக்கு நல்ல சிகிச்சை அளிக்கப்பட்டு வந்தது. ஆனால் அந்தச் சிகிச்சை நல்ல பலன் அளிக்கக் கூடும் என்ற நம்பிக்கை மட்டும் யாருக்குமே எழவில்லை. அவன் வாழ்க்கை நாடகத்தின் கடைசித் திரை விழக் கூடிய கட்டம் நெருங்கி விட்டதாகவே எண்ணினர்.

ஹரிமோகன் எனது பால்ய நண்பன். பள்ளியில் படிக்கும்பொழுது நாங்கள் பக்கத்தில் பக்கத்தில் உட்கார்ந்திருந்தோம். எங்கள் நட்பு முற்றியது. ஏழை பணக்கார நட்பு நிலைத்திருப்பதில்லை என்பது மறுக்க முடியாத உண்மைதான். ஆனால் அது எங்கள் இருவர் விஷயத்திலும் ஏனே பொய்த்து விட்டது. எங்கள் நட்பு வளர வளர, நான் அவனைத் தினம் தினம் போய்ப் பார்த்து வரலானேன்.

அதோடு, ஹரிமோகனுக்குத் தன் மனைவியைத் தவிர நெருங்கிய உறவினர்கள் என்று சொல்லிக் கொள்ள வேறு யாருமே கிடையாது. என்னை விட்டால் வேறு ஆள் இல்லை என்ற காரணத்தினால் நான் தவறாமல் நான் அவன் வீட்டுக்குப் போய் வரும்படியாகி விட்டது.

அவனிடம் வேண்டிய மட்டும் பணம் இருந்தது. சர்க்கரை இருக்கும் இடத்தை நாடி எறும்புகள் வராக் கேட்பானேன்? பணக்காரனைச் சுற்றிப் பத்துப் பேர் என்ற பழமொழியும் உண்டே! ஆனால் யார் யாரெல்லாமோ அவன் வீட்டுக்கு எறும்பென வந்து போய்க் கொண்டிருந்தனர். ஆனால அவனுக்குக் காச நோய் கண்டிருக்கிறது என்ற விஷயம் தெரிய வரவே, அவர்கள் பிள்ளையார் எறும்பென வந்த சுவடு தெரியாமல் மறைந்து விட்டனர். அதாவது அவன் வீட்டுக்கு வந்து போவதை நிறுத்திக் கொண்டனர். எறும்புகளைப் போலவே, சர்க்கரையைத் தேடி, அவர்கள் வேறு எங்காவது சென்று விட்டார்களோ, என்னவோ? அதனால் தற்சமயம் அவனைப் போய்ப் பார்த்து வருபவர்களில் நான் ஒருவன் மட்டுமே எஞ்சி யிருந்தேன். அவன் மனைவி ரமாவோடு அதிகமாகப் பேசியறியாதவன் நான். அவன் நோய்வாய்ப்படவே, அவளோடு நெருங்கிப் பேசிப்பழகும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அந்த அறிமுகம் மட்டும் வாய்க்கப் பெற்றிராவிட்டால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்குமே என்று இன்று கூட நான் சில சமயம் எண்ணுவதுண்டு.

ஹரிமோகன் படுக்கையில் அமர்ந்து உடலை உலுக்கும் பயங்கர இருமல் இருமிக் கொண்டிருந்தான்.

இருமல் சற்று மட்டுப்பட்டதும், "என் தொண்டை மிகவும் கெட்டு விட்டது. மருந்து போட்டுப் போட்டு, வாய் கொப்புளித்துக் கொப்புளித்து நான் மிகவும் சோர்ந்துவிட்டேன். இந்த நோயிலிருந்து எனக்கு எப்பொழுது விடுதலை கிடைக்குமோ, தெரியவில்லை. ஒருவேளை இது என்னை விடவே விடாதோ?" என்றான்.

"ஏன் விடாது? கவலைப்படாதே. கூடிய சீக்கிரமே குணம் காண்பாய்!" என்று நான் ஆறுதல் அளித்தேன்.

"நான் எதற்குமே கவலைப்படவில்லை; ஆனால் இந்த இருமல் எவ்வளவு பயங்கரமாக இருக்கிறது, பார்த்தாயா?" என்று கூறி அவன் மீண்டும் இருமலானான்.

சிறிது நேரம் நாங்கள் இருவரும் பேசாமல் இருந்தோம்.

"இப்பொழுது எச்சிலில் ஒன்றும் இல்லை; எதுவும் இராது என்றுகூட எனக்குத் தெரியும்; இது சாதாரண இன்ப்ளுயன்ஸாதான்!" என்றான் ஹரிமோகன் மறுபடியும்.

அந்த சமயம் பால் கோப்பையோடு ரமா உள்ளே நுழைந்தாள்.

மீண்டும் ஒரு முறை நீண்ட நேரம் இருமி விட்டு, இருமல் அடங்குவதற்குள்ளாகவே, "என்ன கொண்டு வந்திருக்கிறாய்?" என்று கேட்டான் ஹரிமோகன்.

"பால்!" என்றாள் அவள்.

"அட ஆண்டவனே! அதற்குள் மறுபடியுமா?"

"டாக்டர்கள் சொல்லியிருக்கிறார்களே!"

"ஸரமா! சிறிது நேரம் கூட நீ என்னைச் சும்மா உட்கார்ந்திருக்க விடமாட்டாயா? இப்பொழுது தானே...." வாக்கியத்தை முடிப்பதற்குள்ளாக மீண்டும் இருமல் வந்துவிட்டது. இருமல் நின்றபின், "நான் முதலில் மருந்து குடித்தேன். பிறகு மருந்து நீர் விட்டு வாய் கொப்புளித்தேன். அப்புறம் தொண்டைக்கு 'ஸ்பிரே' செய்து கொண்டேன். அடுத்தபடியாகப் பழரசம் குடித்தேன். இப்பொழுது பால்..." என்றான்.

"நீங்கள் உடல் பலம் அளிக்கும் உணவு வகைகளைச் சாப்பிட்டால்தான் சீக்கிரம் சொஸ்தமடைவீர்கள் என்று டாக்டர்கள் சொல்லியிருக்கிறார்கள்! நான் அப்படி ஒன்றும் அதிகமாகப் பால் கொண்டு வரவில்லை. இந்த ஒரு வாய் மட்டும் குடியுங்கள்!" என்று கூறி ஸரமா பால் கோப்பையை அவனருகில் வைத்தாள்.

ஹரிமோகன் இரண்டு மிடறு பால் குடித்து விட்டு, "இனி என்னால் குடிக்க முடியாது. தயவு செய்து இதை இங்கிருந்து எடுத்துப் போய்விடு. என் வயிற்றில் துளிக்கூட இடமில்லை!" என்று கடிந்து கொண்டான்.

"சின்னக் கோப்பைதானே? இன்னும் கொஞ்சம் குடியுங்கள்!" என்று கூறியவள் என்னைப் பார்த்து, "நீங்கள் சொல்லுங்கள் குடிக்கச் சொல்லி!" என்றாள்.

நான் சொன்னேன். "சரி, உனக்காக இன்னும் ஒரு மிடறு குடிக்கிறேன்!" என்று கூறிக் குடித்தான். அவன் மிஞ்சி மிஞ்சிக் குடித்ததெல்லாம் அரைக் கோப்பைதான்.

ஸரமா கோப்பையை எடுத்துக் கொண்டு வெளியேறி விட்டாள். எனக்கு நேரமாகிக் கொண்டிருந்தது. ஸரமாவிடம் ஒரு முக்கிய சமாசாரம் சொல்லிவிட்டு நான் போகவேண்டியிருந்தது. டாக்டர்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டிருக்கும் ஜுரத்தைப் பற்றி ஹரிமோகனிடம் ஒன்றும் சொல்லக்கூடாது என்று சொல்லியிருந்தார்கள். அதை அவளுக்கும் நினைவு படுத்திவிட்டுப் போக வேண்டுமென்று நினைத்தேன்.

"மணி ஒன்பது ஆகிவிட்டது. நான் வருகிறேன்" என்று கூறி ஹரிமோகனிடம் விடை பெற்றேன். அவனும் சரியென்று கூறிப் படுக்கையில் புரண்டு படுத்தான்.

பக்கத்து அறை வழியாகப் போனவன், அங்கே கண்ட காட்சியில் அப்படியே சிலையாகச் சமைந்துவிட்டேன். ஹரிமோகன் சாப்பிட்டது போக மிஞ்சிய பாலை ஸரமா குடித்துக்கொண்டிருந்தாள். "என்ன பைத்தியக்காரக் காரியம் இது?" என்றேன் நான்.

ஸரமா சிறிது வெட்கினாள். பிறகு நாணம் கலந்த குரலில் "ஒன்றுமில்லை!" என்றவள், தன்னைச் சமாளித்துக் கொண்டு தொடர்ந்தாள்: "தாங்கள் பார்த்துவிட்டீர்கள். இனி நான் வேறு என்ன செய்ய முடியும்? ஆனால் வேறு யாரிடமும் சொல்லி விடாதீர்கள்!"

"நான் யாரிடமும் சொல்ல மாட்டேன்! ஆனால் இந்த எச்சிற் பாலை-எதற்காகக் குடித்தீர்கள்?" என்று கேட்டேன்.

ஸரமா இலேசாக நகைத்து, "கணவன் குடித்த எச்சிலைச் சாப்பிடுவது தவறா?" என்று கேட்டாள்.

தவறா? - அந்த நோய் பற்றி நான் அறிந்த விவரமெல்லாம் சொன்னேன். ஸரமா நான் சொன்னதையெல்லாம் கவனமாகக் கேட்டாள். பிறகு விழிகளின் ஒளி பளிச்சிட என்னைப் பார்த்து, "நீங்கள் சொல்வது மெய்தான். ஆனால் ஒரு விஷயம். அவரின்றி நான் உயிர் வாழ்ந்து என்ன பயன்? குழந்தை குட்டிகள் இருந்தாலும் அவற்றுக்காக உயிர் வாழ்வது..." என்று சொல்ல வேண்டியதைச் சொல்லாமலே சொல்லி எனக்கு விளங்க வைத்து விட்டாள்.

நான் எவ்வளவோ எடுத்துச் சொன்னேன்; அவ்வளவையும் கேட்டு விட்டு அவள் முறுவலித்தவண்ணம் நின்றாளே யொழிய பதில் ஒன்றும் சொல்லவில்லை.





ஹரிமோகனின் நோய் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே போயிற்று. அவனுக்குக் காச நோய் என்பதை அவனிடம் மறைப்பதே சிரமமான காரியம் ஆகிவிட்டது. அவனுக்குத் தன் நோயைப் பற்றித் தெரியவே, அவனது கலவரம் அதிகமாயிற்று. அவனுக்குச் சிகிச்சை செய்து வந்த டாக்டர்கள் இன்னும் இரண்டு பெரிய டாக்டர்களைக் கூப்பிட்டார்கள். நால்வரும் சேர்ந்து எக்ஸ்ரே எடுக்கத் தீர்மானித்தார்கள்: எக்ஸ்ரே மூலம் ஒரு சுவாசப் பை மட்டுமே கெட்டிருக்கிறது என்றும் மற்றது நல்லபடியாகவே இருக்கிறது என்றும் ஊர்ஜிதமாயிற்று. அவன் சானடோரியம் சென்று ஆபரேஷன் செய்து கொண்டால் குணமாகி விடலாம் என்றும் கூறினர். பணக் கவலே இல்லாததால், சில நாட்களுக்கெல்லாம் ஹரிமோகன் தரம்பூர் சானடோரியத்துக்குச் சென்றான். அவனோடு ஸரமாவும் போனாள். அதற்குப் பின் நான் ஹரிமோகனைப் பற்றி அதிகமாகக் கேள்விப்படவில்லை. முதலில் நாங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் கடிதம் எழுதிக் கொண்டிருந்தோம். நாளடைவில் கடிதப் போக்குவரத்தும் நின்றுவிட்டது. அவன் முன்னைக் காட்டிலும் நன்றாயிருக்கிறான் என்று மட்டும் எனக்குச் செய்தி எட்டியது. அதற்குப் பின் அவனைப் பற்றி அறிந்துகொள்ள நானும் முயலவில்லை; அவனும் எனக்கு அறிவிக்க முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை.

ஹரிமோகன் ஸ்விட்ஸர்லாந்து போயிருக்கிறான் என்று ஒரு நாள் யார் மூலமாகவோ கேள்விப்பட்டேன். ஏன், எதற்கு என்று தெரியவில்லை: அவனோ பணக்காரன். போயிருந்தால் அதில் வியப்பதற்கென்ன இருக்கிறது?

என் குமாஸ்தா வாழ்வு எப்பொழுதும் போல் ஓடிக் கொண்டிருந்தது. பணக்காரர்கள் வாழ்வில் குறுக்கிட நமக்கு ஏது உரிமை? அதோடு ஹரிமோகனும்தான் எனக்குத் தன் விலாசத்தை எங்கே கொடுத்திருந்தான்?

**ப**த்து ஆண்டுகள் ஓடி விட்டன. ஹரிமோகனை ஒருவாறு நான் மறந்திருந்தேன் என்று கூடச் சொல்லலாம். ஒரு நாள் திடீரென்று எனக்கு அவனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. சின்னக் கடிதம்தான்.

''நான் அடுத்த வாரம் கல்கத்தா வருகிறேன். கட்டாயம் சந்திக்கவும்.—உன் அன்புள்ள ஹரிமோகன்.''

அவன் அந்தக் கடிதத்தைத் தனது கிராமத்திலிருந்து எழுதியிருந்தான்.

நான் செவ்வாய்க்கிழமையன்று காரியாலயத்திலிருந்து நேரே ஹரிமோகன் வீட்டை அடைந்தேன். அவன் வீட்டிலிருந்தான். அன்போடு என்னே வரவேற்றான்.

அவனைப் பார்த்து நான் வியந்தேன். அவன் உடல் ஒரேயடியாக மாறிப்போயிருந்தது. நல்ல திடகாத்திரமாகத் தோற்றமளித்தான். இவனுக்கா ஒரு காலத்தில் காச நோய் கண்டிருந்தது என்று சொல்லும் அளவுக்கு அவன் தேறியிருந்தான்.

''இப்பொழுது உன் உடம்பு நன்றாகக் குணமாகி விட்டது அல்லவா?'' என்று கேட்டேன்.

''நன்றாகக் குணமாகிவிட்டது'' என்று கூறியவன் தனக்குச் சிகிச்சை யளித்து எமன் வாயில் போன உயிரைத் திரும்பி மீட்டு வந்த டாக்டரின் திறப் பிரதாபங்களைப் பிரமாதமாக அளந்தான்.

''ஸ்விட்ஸர்லாந்து போயிருந்தாயாமே! ஊர் எப்படி?'' என்று கேட்டேன்.

''மிகவும் நல்ல இடம். புத்தகங்களில் எழுதப்பட்டிருப்பதைக் காட்டிலும் அழகான இடம். வா, மாடிக்குப் போவோம்!'' என்று அழைத்தான்.

உயரப் போனதும் ''ஸரமா! ஸரமா! நரேஷ் வந்திருக்கிறான். சிற்றுண்டியும் தேநீரும் அனுப்பி வை! — உட்காரு, நரேஷ்! உட்காரு!'' என்றான்.

நான் ஆயிரம் கோணல் கோணிக்கொண்டு அவனது மென்மையான சோபாவின் மீது பவ்யமாக அமர்ந்தேன்.

''உன் சமாசாரம் என்ன சொல், அப்பா! ஆள் நிரம்பவும் மாறிப் போயிருக்கிறாயே! காதோரத்தில் உன்ன தலை மயிரெல்லாம் கூட நரைத்து விட்டதே! அதுவும் இத்தனை சிறு வயதில்! அங்கே — அதாவது மேல் நாடுகளிலெல்லாம் இளமை ஐம்பதாவது வயதில் தான் ஆரம்பமாகிறது!'' என்று சொன்னவன் 'ஆரம்பமாகிறது' என்னும் சொல்லுக்கு ஓர் அழுத்தமும் கொடுத்துப் பேசினான்.

'எனக்கு ஜுரம் வருகிறது. டாக்டர்கள் காச நோயா யிருக்குமோ என்று சந்தேகப்படுகிறார்கள்' என்று சொல்லாமல், ''இந்த நாட்டுக்கும் அந்த நாட்டுக்கும் ஏக வித்தியாசம். அதோடு, ஹரிமோகன்! நீ ஒன்றை மறந்து பேசுகிறாய். நான் இருபத்தைந்து வருடங்களாக இந்தக் குமாஸ்தா உத்தியோகத்தில் கிடந்து உழலு





பம்பாய் ஸிக்கா கம்பெனியின் டைரக்டர் திரு பி. சீனிவாசன் அவர்களின் புதல்வர் திரு எஸ். டி. சாரிக்கும் சௌ. ஜெயமணிக்கும் திருமணம் நடந்தது.



டாக்டர் எஸ். ஜெகந்நாதன் அவர்களின் புதல்வி சௌ. கல்பகத்துக்கும் திரு எம். சுப்பிரமணியனுக்கும் அதி விமரிசையாகத் திருமணம் நடந்தது.

---

கிறேனே, செக்கு மாடுபோல. மூச்சு விடப் பொழுது இருக்கிறதா எனக்கு?'' என்றேன்.

''இதனால் என்னப்பா பெரிய வித்தியாசம் ஏற்பட்டுவிடப் போகிறது?''—கடகடவென்று அவன் நகைத்தான். ஹரிமோகனுக்கு என்ன? அவன் பணக்காரன். சிரிக்கலாம். என்னைப் போலக் குடும்பக் கவலையோ, பணக் கவலையோ அவனுக்கு ஏது? என் என்பதற்குள் என்னெனவாக நிற்க எத்தனையோ பேர் காத்திருந்தனர். இங்கே எனக்கு அப்படி யார் இருந்தார்கள்? நோயா, நொடியா? குடும்பத்துக்கு வேண்டிய பண்டங்கள் இல்லையா? எதற்கும் நான் அல்லவா தலை கொடுக்க வேண்டியிருந்தது? என் நிலையில் அவன் இருந்தால் இப்படிச் சிரிப்பானா? அல்லது என்னைப் போலவாவது எதையும் காட்டிக் கொள்ளாமல் வளைய வருவானா?

ஆனால் அவன் சிரிப்பே ஒரு தனி ரகம். அந்தப் பழைய சிரிப்புக்கு இன்றையச் சிரிப்பு என்னளவும் சோடை போகவில்லை. அவன் பெருகு ஏறிய அழகான உடலையும், இளமைத் துடிப்புத் தொனிக்கும் பேச்சையும் கேட்டு எனக்கே கூடச் சிறிது பொறாமையாக இருந்தது.

ஸரமா சிற்றுண்டித் தட்டை எடுத்துக் கொண்டு உள்ளே நுழைந்தாள். ஸரமாவைப் பார்த்ததும் என் வியப்பு பன்மடங்காகப் பெருகியது. பத்து ஆண்டுகளுக்குள் ஒருவர் இப்படியெல்லாம் மாறிவிட முடியுமா? நான் அசந்து போய் அவளையே வைத்த கண் வாங்காமல் பார்க்கலானேன். ஸரமா அதைக் கண்ணுற்று வெட்கித் தலை குனிந்தாள்.

அவள் சிற்றுண்டித் தட்டை ஒரு சிறு மூக்காலிமீது வைத்துவிட்டு, ''இதோ போய்த் தேநீர் எடுத்து வருகிறேன்!'' என்று கூறிச் சென்றாள்.

''ஸரமா பத்தாண்டுகளுக்குள் இத்தனை மாறிவிட்டாளே! அடையாளமேகூடக் கண்டு கொள்ள முடியவில்லையே!'' என்றேன் நான் ஹரிமோகனிடம்.

ஹரிமோகன் சிறிது நேரம் என்னையே பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு, ''ஆமாம், மாறித்தான்விட்டாள். ஏனெனில் எந்த ஸரமாவை உனக்குத் தெரியுமோ, அந்த ஸரமா இல்லை இவள். அந்த ஸரமா வெகு காலத்துக்கு முன்பே இறந்து விட்டாள். அவளுக்கும் துரதிர்ஷ்டவசமாகக் காச நோய் பற்றிக் கொண்டது. அது இரண்டு சுவாசப் பைகளையும் பற்றிவிட்டது!'' என்று கூறியவன் சிறிது நேரம் மௌனம் சாதித்தான். ''கடைசியில் நோய் முற்றி அவளுடைய சுவாசப் பைகளையே தின்றுவிட்டது. நான் எத்தனையோ முயன்று பார்த்தேன். அவள் அந்த நோயிலிருந்து மீளவில்லை. மாண்டுவிட்டாள்.''

நாங்கள் இருவரும் வாய் மூடி மௌனிகளாக உட்கார்ந்திருந்தோம். ஹரிமோகனே பேச்சைத் தொடர்ந்தான்: ''நான் என்ன செய்ய முடியும், நீயே சொல்லு! நான் மறுமணம் செய்து கொள்ளும்படியாயிற்று. கடைசியில் அதே பெயர் உள்ள பெண் ஒருத்தியைத் தேடி மணந்தேன். அவள் பெயர் என் உள்ளத்தில் அழியாமற் பதிந்து விட்டது. அந்தப் பெயருக்குப் பதிலாக வேறு பெயரை என் உள்ளம் ஏற்க மறுத்தது.''

இதுவென்று அவன் பேச்சை நிறுத்தி விட்டான்.

ஸரமா தேநீர்த் தட்டை ஏந்தியவாறு அறைக்குள் நுழைந்தாள். சிற்றுண்டித் தட்டு ஒன்றை ஹரிமோகன் எதிரே வைத்தாள். ''என்னால் இவ்வளவு சாப்பிட முடியாது. நீ எவ்வளவு அதிகமாக எடுத்துக் கொண்டு வந்துவிட்டாய், தெரியுமா?'' என்றான் ஹரிமோகன்.

''நீங்கள் நன்றாகச் சாப்பிட வேண்டும். சில நாட்களாக நீங்கள் சரியாகச் சாப்பிடுவதே யில்லை!'' என்றாள் ஸரமா. இந்தச் சொற்களை நான் எப்பொழுது கேட்டேன்? அவள் என் பக்கம் திரும்பி, ''நீங்கள் சொல்லுங்கள், நன்றாகச் சாப்பிட வேண்டும் என்று! இவர் தம் உடல் நலத்தைச் சிறிதும் கவனித்துக் கொள்வதே இல்லை!'' என்றாள்.

அதே ஸரமாதானா இந்த ஸரமா?

''நீ நரேஷுக்குக் 'கஜூரி சந்தேஷ்' கொண்டு வந்திருக்கிறாயோ? இவனுக்குக் 'கஜூரி சந்தேஷ்' என்றால் உயிர், ஸரமா!'' என்றான் ஹரிமோகன்.

''கொண்டு வந்திருக்கிறேனே!'' என்று கூறி ஸரமா என் எதிரே 'சந்தேஷ்' தட்டை வைத்தாள். தமிழாக்கம்: — ரா. வீ.



# இமாலய முகட்டிலே....

இந்தியாவின் வடகிழக்கு எல்லைப் பிரதேசத்தில் ஆக்கிரமித்துப் புகுந்த சீனப் படைகள் இப்போது சில முக்கியமான முன்னணி ஸ்தலங்களிலிருந்து வாபஸாகி யிருக்கின்றன. இந்த வாபஸ் நடவடிக்கை இன்னமும் நடந்து கொண்டிருக்கிறது. ஆனாலும், எந்த இடம் வரையில் சீனர்கள் வாபஸாகப் போகிறார்கள் என்பது தற்போதும்கூடப் புரியவில்லை. காமெங் டிவிஷனிலுள்ள பொம்டிலா, லோஹித் டிவிஷனைச் சேர்ந்த வாலாங் ஆகிய நகரங்களைச் சீனப் படைகள் காலி செய்து விட்டுப் போனபின்பு, இந்திய நிர்வாக அதிகாரிகள் இப்பகுதிகளுக்குச் சென்று, பாரதக் கொடியை மீண்டும் ஏற்றி, நிர்வாகம் நடத்தத் தொடங்கி யிருக்கிறார்கள்.

இப்படியாக, சீனர்கள் வசம் ஆக்கிரமிப்புக்கு உள்ளாகியிருந்த பல பகுதிகளில் திரும்பவும் முன்னெப்போதும் போலவே சகஜ வாழ்க்கை நிலவி வருகிறது. இப் பிரதேசங்கள் சீனர் வசமிருந்த இந்த ஒரு மாத காலத்தில், பலவிதமான அட்டூழியங்களுக்கு உள்ளாகி யிருக்கின்றன. சீனர்கள் சொல்ல முடியாத அளவுக்குப் பல அக்கிரமங்களைச் செய்து விட்டே திரும்பிப் போயிருக்கிறார்கள். பொம்டிலா நகரம் நாசமாக்கப்பட்டு ஸ்தல மக்கள் எவ்வளவு துன்புறுத்தப்பட்டிருக்கிறார்கள் என்ற விவரம் இப்போது கண்கூடாகத் தெரிய வருகிறது. புட் ஹில்ஸ் என்ற இடத்திலிருந்து எழுபது மைல் தூரம் ரஸ்தா மார்க்கமாகச் சென்று பொம்டிலாவை அடைவதற்குள், வழிநெடுகச் சீனர்களின் கோரமான அட்டூழியச் செயல்களே காட்சியளிக்கின்றன. எங்கும் மனித நடமாட்டமே காணோம். துணிமணிகளையும் பண்டம் பாத்திரங்களையும் அப்படி அப்படியே போட்டு விட்டு, பதறி ஓடிய கிராம மக்களின் குடிசைகள் மட்டுமே தென்படுகின்றன. பீரங்கிக் குண்டுகளால் துளைக்கப்பட்ட சுவர்கள் ஒரு பக்கமும், ரஸ்தாவில் அங்கங்கே சிதறிக் கிடந்த துணி மூட்டைகள் ஒருபக்கமும், சக்கரங்களும் இன்ஜின்களும் கழற்றப்பட்ட மோட்டார்கள் ஒரு பக்கமும், உடைக்கப்பட்டுத் திறந்து காலியாக்கப்பட்டுக் கிடந்த டிரங்குப் பெட்டிகள் ஒரு பக்கமும் வழி நெடுக அலங்கோலமாகக் கிடக்கின்றன.

முப்பது நாட்களில் சீனர்கள் பாரத பூமியில் இவ்வளவு அட்டகாசம் செய்து விட்டுப் போயிருக்கிறார்கள். இவைகளுடன் விட்டார்களா? புத்த ஆலயத்தில் இருந்த வெள்ளி விளக்குகளையும் பூஜைப் பாத்திரங்களையும் களவாடிச் சென்று அந்தக் கோயிலையும் நாசமாக்கி யிருக்கின்றனர். நகரிலுள்ள எல்லாக் கட்டடங்களும் பீரங்கிக் குண்டுகளால் தாக்குண்டு சிதைந்து கிடக்கின்றன. தங்களுடைய கோவேறு கழுதைகள் மீது ஏற்றிப் போக முடியாத நாற்காலி, மேஜை போன்ற ஆபீஸ் சாமான்களை உடைத்து, தங்கள் வெறி உணர்ச்சியைக் காட்டியிருக்கிறார்கள். சீனர்கள் வைத்திருந்த தரைக் கண்ணிகளில் சிக்கிச் செத்துப் போன ஆடுமாடுகள் ரஸ்தாவிலும் மலைச் சரிவுகளிலும் கிடந்து துர்நாற்றம் வீசுகின்றன. ஒரு மாத காலத்துக்கு முன்னால் ஓர் உயர்தரப் பாடசாலை, இரு மருத்துவ சாலைகள், குடிநீர் வசதி ஆகியவற்றுடன் விளங்கிய முப்பதாயிரம் மக்கட் தொகை கொண்ட பொம்டிலா நகரந்தான் இவ்வாறு விகாரக் காட்சியளிக்கிறது. இதில் ஒரு பெரிய ஆச்சரியம் என்னவென்றால், இவ்வளவு அக்கிரமங்களைச்செய்து விட்டுப் போயிருக்கும் இந்தச் சீனர்கள் பாரத பூமியில் ஓர் ஈ எறும்பைக்கூடக் கொல்லாதபடி தங்கள் படைகள் வாபஸ் அடைந்து கொண்டிருப்பதாகப் பீகிங் ரேடியோவில் நாள் தவறாமல் பொய்ப் பிரசாரங்கள் செய்து கொண்டிருப்பதுதான்.

சீனப் பீடாரிகள் வருவதைத் தெரிந்து கொண்டு, முன்கூட்டியே மலைப் பிரதேசக் காடுகளுக்குள் ஓடி ஒளிந்து கொண்டிருந்த மன்பா, கம்பா என்ற மலை ஜாதி மக்கள் சிலர் இப்போது திரும்பி வந்து கொண்டிருக்கி




யார்! ரசிகர்களா?

னர்கள். தம் குடிசைகளும் உடைமைகளும் நாசமாக்கப்பட்டதையும் தம் ஆடுமாடுகள் சீனர்களுக்கு உணவாகி விட்டன என்பதையும் இம்மலை ஜாதியினர் கதை கதையாகச் சொல்லிப் புலம்புகிறார்கள். சீனர்கள் வசம் சிக்குண்ட சில பிரதேச மக்கள் உழைக்குமாறு கட்டாயப்படுத்தப் பட்டனர். இவர்களுக்கெல்லாம், பழையபடி இந்திய நிர்வாகம் ஏற்பட்டிருப்பதில் பெரு மகிழ்ச்சி உண்டாகி யிருக்கிறது. பாழாக்கப்பட்ட இந்தப் பகுதிகளைத் திரும்பவும் பழையபடி சீர்திருத்துவதற்கு இன்னும் பல மாதங்கள் பிடிக்கும். இந்திய நிர்வாக அதிகாரிகள் இப்போது இரவு பகலாக இப்பணியில் தான் ஈடுபட்டிருக்கிறார்கள். கையிலும், தலைச் சுமையாகவும், கோவேறு கழுதைகள் மீது ஏற்றியும் எடுத்துப் போகக் கூடிய சாமான்கள் சகலமானவற்றையும் சீனர்கள் இப் பகுதிகளிலிருந்து கொள்ளையடித்துக் கொண்டு போய்விட்டார்கள். தபால் தந்தி இலாகாவைச் சேர்ந்த தந்திக் கம்பங்களில் இருந்த செப்புக் கம்பியை நூற்றுக் கணக்கான மைல் தூர அளவு அறுத்து சுருட்டிக்கொண்டு எடுத்துச் சென்றுவிட்டனர். வயல்களில் அறுவடைக்குத் தயாரா யிருந்த தானியங்களை அறுத்து அவற்றையும் மூட்டை கட்டிக் கொண்டு போய் விட்டனர்.

சீனர்கள் பாரத பூமிக்குள் இவ்வளவு தூரம் ஊடுருவி வருவதற்கு அவர்கள் ஏராளமான படைகளையும் ஆயுதங்களையும் திரட்டி வைத்திருந்தது ஒரு முக்கியமான காரணமாயிருந்தாலும், அவர்கள் அப்படி முன்னேறி வந்தபோது சுலபமாக வரவில்லையென்றும், ஏராளமான சீன உயிர்களைப் பலியிட்டுக் கொண்டுதான் வந்தார்கள் என்றும் இப்போது திட்டமாகத் தெரிகிறது. லடாக்கில் ரெஜாங்லா என்ற இடத்தில் இந்திய வீரர்கள் சொற்ப எண்ணிக்கையில் இருந்தும்கூடப் பிரமாதமாய்ப் போராடி, 700 முதல் 800 சீனர்களைக் கொன்றுவிட்ட பிறகே தாங்களும் வீர சொர்க்கம் அடைந்திருக்கின்றனர். இதில் ஆறேழு இந்தியர்கள்தான் உயிர் தப்பினர். 18,000 அடி உயரத்தில் கடுங்குளிரில் இந்த உக்கிரமான போராட்டம் நடந்திருக்கிறது. ஓர் இந்திய நாயக் வீரர் இதில் படுகாயமடைந்து விட்டார். அவர் இறந்துவிட்டாரென்று கருதி, சீனர்கள் அவர் மீது மண்ணெண்ணெயை ஊற்றித் தீ வைத்துவிட்டுச் சென்றனர். ஆனால், இந்திய நாயக் வீரர் தம் உடல் மீது சூடு பட்டதும் எழுந்து தம் மீது இருந்த ஒன்பது துப்பாக்கிக் குண்டுக் காயங்களையும் பொருட்படுத்தாமல் சகித்துக் கொண்டு தள்ளாடியபடியே சிறிது தூரம் நகர்ந்து நானூறு கெஜதூரம் மலையிலிருந்து உருண்டு கொண்டே கீழே சரிந்து விழுந்து, தட்டுத் தடுமாறி நடந்து போய்த் தம்முடைய ஸ்தலத்தை அடைந்தார்.

இப்படி இந்திய எல்லையைக் காக்கப் பாரத வீரர்கள் தம் உயிரைத் திருணமாக மதித்துப் போராடி யிருக்கிறார்கள். இப்போதும் பல ஆயிரக் கணக்கான அடி உயரத்தில் கடுங் குளிரையும் பொருட்படுத்தாதபடி, நம் பாரத வீரர்கள் இரவு பகல் ஓயாமல் நம் எல்லைகளைக் காத்து நிற்கிறார்கள்.

— நமது நிருபர்

# பொறுத்திரு, அப்பனே !

கிராமத்திலிருந்து வந்த அந்த முதியவர் நகரக் கடையில் அரை மூட்டை உளுந்து வாங்கிவந்து கொண்டிருந்தார். வரும் வழியில் ஒரு வாலிபன் அவரை எதிர் கொண்டான்.

''ஏண்டாப்பா! நீ வந்து....''

''மாமா! நான் பிச்சுவின் பிள்ளை கப்பு..!''

''அதுதானே பார்த்தேன். உன்னை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்குன்னு.... சரிதான். நமக்கு ரொம்பத் தெரிஞ்சவன் பிள்ளைன்னு.........''

''அப்படியா, மாமா!''

''அது மட்டுமில்லேடா! உன் ஜாதகம் எங்க ஊருக்கு வந்திருக்கு போலிருக்கேடா!''

'அப்படியா !''

'ஆமாம்டா! எங்க ஊர சீமாச்சு பெண்ணுக்கு உன்னைப் பார்க்கிறு போலிருக்கு. ஜாதகப் பொருத்தம் பார்த்துச் சொல்லும்படி என்கிட்டே கொண்டு வந்தா...''

'அப்படியா மாமா ?''

''ஆமா! பொண்ணு கிளி போல இருப்பா. அவ பாடினால் இன்னைக்கு முழுதும் கேட்டுண்டிருக்கலாமடா! இந்த மூட்டை என்னமா கனக்கிறது: ஸ்டேஷனுக்குக் கொண்டு போக ஓர் ஆள் அகப்பட மாட்டான் போலிருக்கே..''

'அதனால் என்ன மாமா! நீங்க சிரமப்பட வேண்டாம். அந்த மூட்டையை என்னிடம் கொடுங்கோ...நான் தூக்கிண்டு வரேன்...''

''ஏண்டாப்பா! எங்கள் ஊருக்கு வரப் போற மாப்பிள்ளையை இப்பவே சுமை தூக்க விடுவாளா?...வேண்டாம்... வேண்டாம்!'' என்று தடுத்தார் முதியவர்.

''பரவாயில்லே, மாமா! நீங்க ரொம்பச் சிரமப்படறேள். இந்த ஒத்தாசை உங்களுக்குச் செய்யக் கூடாதோ?''

அந்த முதியவர் அவனிடம் மூட்டையைக் கொடுத்தார். பையன் சுமக்க முடியாமல் தூக்கி வந்தான். முதியவர் தொடுத்துப் பேசிக் கொண்டே வந்தார்.

''பொண்ணு ரதின்னு ரதிதான்...''

'ஓகோ...''

''குணம் தங்கக் கம்பிதான்! அவளைக் கல்யாணம் பண்ணிக்கிறவன் பாக்கியசாலி. கொடுத்து வைச்சிருக்கணும்!''

இதற்குள் ரயில்வே ஸ்டேஷன் வந்து விட்டது. அவன் பிளாட்பாரம் டிக்கெட் வாங்கிக் கொண்டு அவரை ரயிலில் ஏற்றி உட்கார வைத்தான். உளுந்து மூட்டையையும் வண்டியில் ஏற்றினான்

கார்டும் விஸில் ஊதி விட்டார். கப்புவின் நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது.

''மாமா! என் ஜாதகம் பார்த்தேன்னு சொன்னேளே பொருத்தமிருக்கா இல்லையான்னு இன்னும் சொல்லவில்லையே?''

''அதுதானே! நான் அடுத்த தடவை வரை மூட்டை வாங்க வருவேன்! அப்ப சொல்கிறேன்!'' என்றார் முதியவர்.

[திருவையாறு ஸ்ரீ அண்ணாசாமி பாகவதர் ஹரிகதையில் ஒரு கிளைக்கதை]




# சந்திரனே சாட்சி

கதை: கௌசிகன்

சித்திரம்: வினு













வாழையூருக்கு ரயில்வே ஸ்டேஷனே இருக்கிறது 24 3 மைல்கள்...
ரயில் பிரயாணமா? வேண்டாம் அப்பனே! காரிலேயே போய் விடலாம்.


அந்தப் பழைய மழுத்துப் போன பத்திரிகைக் கிளிப்பைக் கொண்டு வந்திருக்கிறாய் அல்லவா?
அதோ அது இல்லாமலா?
கார் வாழையூரை நோக்கி விரைகிறது.


வாழையூர்
POST OFFICE
ஒரு ஊரின் நல்லது கெட்டது நினைச் சமமாகப் பாவித்து கவனிப்பவர்கள் தபால்காரர்கள். அதோ அவர் நமக்கு உபயோகமாக இருப்பார்!
பெரியவரே, ஒரு நிமிஷம் இப்படி வரலாமா?


நீங்க ஏதாவது பத்திரிகைக் கதை எழுதறவங்களா? ரொம்ப காலத்து விசயத்தைக் கேக்கிறீங்களே?
கிழவரிடம் பேச்சுக் கொடுத்து ரகுநாதனைப் பற்றிக் கேட்கிறார்கள்.
கரெக்ட்! ஜோசியம் தெரிஞ்ச மாதிரி சொல்லிட்டீங்க.


அவசியம்! உங்களைப் பார்த்தால் ஊருக்குப் புதுசின்னு தோணுது.
ஆமா. நீங்க டூட்டி முடிஞ்சு போறீங்களா! எங்களுக்காக உங்க நேரத்தைக் கொஞ்சம் செலவிட முடியுமா!
பெரியவரே காரிலே ஏறிக்குங்க. அந்த ஆற்றங்கரைப் பக்கமாப் போய் உட்கார்ந்து பேசலாம்.


என்ன, அந்த ரகுநாதனும் இப்படித்தான் உங்க மாதிரி கதை, கட்டுரைன்னு எழுதிப் பிறகு பத்திரிகையே நடத்தி... ம்... அது பெரிய கதை. இப்ப நினைச்சாலும் மனசை என்னவோ செய்யுது. எனக்குத் தெரிஞ்சது, நான் கேள்விப்பட்டது எல்லாத்தையும் சேர்த்துச் சொன்னாத்தான் உங்களுக்குப் புரியும். இருபத்தி இரண்டு வருஷங்களுக்கு முன்னாலெ, இதே ஊரிலே..

# சக்தியும் மிகுதியும்

MICO





மோட்டார் இண்டஸ்ட்ரீஸ் கம்பெனி லிமிடெட்,
பெங்களூர்.

விற்பனை நிலையங்கள்:
பம்பாய்-2: 41 குவீன்ஸ் ரோடு.
கல்கத்தா-16: 91-A, பார்க் தெரு.
சென்னை-2: 1/155, மவுண்ட் ரோடு.
புது டெல்லி-1: காஜியாபாத் எஞ்சினீரிங் கோ.,
44, ஜன்பாத்.

ஒரு டீசல் எஞ்சின் ஒப்பில்லாமல் ஓடும் திறமை அதன் எண்ணெய் உறிஞ்சும் தன்மையைப் பொறுத்தே இருக்கிறது.

உலகம் பூராவும் 40 ஆண்டுகட்குமேல் சோதிக்கப் பட்ட திறமையுடன் விளங்கும் மைகோ டீசல் எஞ்சின், விசேஷமாக இந்திய விவசாய நிலைமைக் கேற்றவாறு போஷ் (ஜெர்மனி) ஸ்தாபனத்தின் நேரடி ஒத்துழைப்புடன் இந்தியாவில் உற்பத்தி செய்யப்படுகின்றது.



# அன்னையின் குரல்...

ரஞ்சோதி

நாலாவது கிராஸ் தெருவில் பாதிக்கு மேலே இருண்டு கிடந்தது. இங்கொன்றும் அங்கொன்றுமாக மின்விளக்குகள் கம்பங் களில் நெடுந் தூரம் இடைவெளி விட்டு நின்று அழுது வழிந்து கொண்டிருந்தன.

காலில் நாலு நாட்களுக்கு முன்னால் கண்ணாடித் துண்டு குத்தியதனால் ஏற்பட்ட புண் சீழோடி இன்றைக்குத் தாளவே முடி யாமல் வலித்தது.

இருநூறு அடி நடந்து விட்டால் தெருவின் கோடியில் உஸ்மான் சாலை குறுக்கே வந்து விடும். அதோடு சில கஜதூரம் இடப்புற மாக நடந்தால் சிவ—விஷ்ணு ஆலயம். பிறகு வலப்புறம் போலீஸ் ஸ்டேஷன் பக்கமாகத் திரும்பி ஒரு பர்லாங் தூரம் போனால் வீடுதான்.

ஆனால் நடப்பதற்குத்தான் எத்தனை சிரம மாக இருக்கிறது. நாலு வருஷங்களாகத் தின மும் காலையிலும் மாலையிலும் நடந்து பழக்கப் பட்ட தூரம்தான். மனக் கவலை காரணமாக இன்று மாளாத தூரமாகத் தோன்றுகிறது!

எந்தக் கவலையை ஒதுக்குவது என்றுதான் சானுவுக்குத் தெரியவில்லை. நாலாவது பிள்ளையைப் 'பெற்றேன் பிழைத்தேன்' என்று பெற்று விட்டுக் கிழித்த நாராகப் பாயில் கிடக்கிறாளே நாட்டுப் பெண் அவளைப் பற்றிய கவலையை விடுவதா? ரேஸ், குதிரை, சீட்டாட்டம் என்று சொல்லிக் கொண்டு சம் பாதிக்கிற ஏழு காசையும் குதிரையின் காலில் கட்டி அடிக்க ஓடும் பொறுப்பற்ற

பிள்ளையைப் பற்றிய கவலையை விடுவதா? நண்டும் சிண்டுமாக நாக்குக்கும் தலைக்கும் பசையின்றிப் பஞ்சைப் பரதேசிகளாக உட்கார்ந்திருக்கிற பேரன் பேத்திகளைப் பற்றிக் கவலையை விடுவதா? இந்தத் தள்ளாத காலத்திலும் பிறத்தியார் வீட்டுச் சமையலறையில் உழைத்து நாலு காசு சம்பாதிக்கும்படி நேர்ந்ததன் தலைவிதியை மறப்பதா? எதை விடுவது? எதை மறப்பது?

சானுவின் பிள்ளை சாமியய்யாவுக்கு டிரைவர் வேலை. டவுனில் யாரோ ஒரு பெரிய மனிதரிடம் வேலை பார்க்கிறான். பெரிய மனிதருக்கு மட்டும்தான் என்றால் அவன் எப்போதோ வந்து விடலாம். ஆனால் அவருடைய பெண்டாட்டி, பிள்ளைகள், மாமியார் இத்தனை பேரும் வண்டியில் ஏறி, கடை, கண்ணிகள் எல்லாம் மூடும் வரை ஊர் சுற்றி விட்டு எப்போது ஓய்ந்து திரும்புவார்களோ அதன் பிறகுதான் அவன் வீடு திரும்ப அனுமதி கிடைக்கும். அப்போது கூட, 'சாமியய்யா! காலையில் சீக்கிரமாக வந்துடு. மகாபலிபுரம் போகணும், காஞ்சிபுரம் போவணும்' என்ற கட்டளையோடுதான்.

எண்பத்தாறு ரூபாய் பிச்சைக்காரப் பிழைப்பு. ஆனால் அதுவே அந்தத் திக்கற்ற ஏழைக் குடும்பத்துக்கு எண்பத்தாறு லட்சமாக இருந்ததே. இதில் மூன்றில் இரண்டு பங்குதான் வீடு வந்து சேரும். பாக்கி கிண்டிப் பக்கம் போய் விடும். கிண்டி இல்லாத நாளில் சீட்டுக் கடை!

புறாக் கூடு மாதிரி ஒரு வீட்டில்தான் அவர்கள் வசித்தார்கள். வீடா? கடவுளே! சானுவும் சங்கரியுமாகக் கொண்டு அதில் குடித்தனம் நடத்தினார்கள். காலை நன்றாக நீட்டிப் படுக்க முடியுமா? சங்கரி பிரசவித்தது கூட அதில் ஒரு பகுதியில்தான். நாலு பிரசவமாகி விட்டது; அந்தச் சின்னப் புறாக் கூட்டுக்குள்!

மகராஜன் — யாரோ ஒரு புண்ணியவான் எதிர் வீட்டில் பெரிய திண்ணையாகக் கட்டி விட்டிருந்தான். அதுதான் சாதாரண நாட்களில் சாமியய்யாவுக்கும் பிரசவ சமயங்களில் குழந்தைகளுக்கும் இரவில் அடைக்கலம் தந்து ஆதரித்தது.

சங்கரி ஒரு நாளாவது கஷ்டம் என்று முணுமுணுத்தது உண்டா? கட்டின கணவன் பொறுப்பற்று இருப்பதை நினைத்துப் பொருமியது உண்டா அவள்? அந்தரங்கமாகக்கூட அவள் கண்களைத் துடைத்ததில்லை.

சானுவாக ஏதாவது சாமியய்யாவைப் பற்றிப் பேச்செடுத்தால் கூட ''அவரைப் பற்றி என் காது கேட்க எதுவும் சொல்லாதீர்கள், அம்மா! ஏதோ இந்தமட்டும் குடியும் குடித்தனமுமாகத் தங்கியிருக்கிறாரே, அதுவே எனக்குப் போதும்!'' என்பாள் சங்கரி.

ஆம்! அது போதும் அவனுக்கு. கலியாணமான புதிதில், யாரோ பரிகாசமாக ஏதோ சொல்லி விட்டார்கள் என்கிற வேகத்தில் சாமியய்யா இளம் மனைவியை விட்டு விட்டுப் பட்டாளத்துக்கு ஓடிப் போய் அப்போது நடந்து கொண்டிருந்த இரண்டாம் உலக மகா யுத்தகளத்துக்கே போய்விட்டான். ஒரு வருஷம் கழித்துத்தான் அவனிடமிருந்து முதல் செய்தி வந்தது. சங்கரி அதற்குள் துடித்த துடிப்பும், அந்த முதல் கடிதம் வந்த அன்று விட்ட ஆனந்தக் கண்ணீரும் — இரண்டுமே வார்த்தைகளால் வர்ணிக்க முடியாதவை.

வானத்தில் ஒரு பேரிடி திடீரென்று இடித்தது. கண்ணைப் பறிக்கிறாற்போல் மின்னல் சாட்டையடியுடன் துள்ளி மறைந்தது.

பழக்கம் காரணமாகத் தெருவின் கோடியில் கால்கள் தாமே இடப்புறம் திரும்பின. இருமருங்கிலும் கடைகளில் ஒளி வீசிய விளக்குகள் கண்களைக் கூசச் செய்தன.

இடது கையில் ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கியிருந்த ரசம், குழம்புப் பாத்திரங்களை யெல்லாம் வலக் கைக்கு மாற்றிக் கொண்டாள் சானு. திரும்பவும் அவள் மனம் சாமியய்யாவிடமே தாவியது.

சங்கரி வந்த வேளை எல்லாம் சரியாகி விடும் என்றுதான் நம்பினாள் சானு. ஆனால் அதுவே பிள்ளையைப் பிரியும் வேளையாகி விடும் என்று எதிர்பார்க்கவில்லை!

எத்தனை பயங்கரமாக அந்த நாட்கள் இருந்தன? பட்சணக் கடை போட்டு மாமியும் மருமகளும் 'விடிவு' நோக்கிக் காத்திருந்த நாட்கள் அவை! ஒருவருக்கு மற்றவர்தான் ஆதரவு! போக்கிடமற்ற ஆதரவு!

சாமியய்யா ஸியாம், சோமாலிலாந்து, டெஹ்ரான் எல்லாம் போய் யுத்தகளங்களைப் பார்த்துவிட்டு, ஆறாறுபாருவாய் ஒரு நாள் திரும்பி வந்து நின்றபோது அந்த ஏழைத் தாய் அப்படியே உருகிப் போய்விட்டாள்!

''என் பிள்ளை வந்து விட்டான்! என் பிள்ளை வந்து விட்டான்!'' என்று தெரு முழுக்கச் சொன்னாள்.

'இனி கஷ்டம் இல்லை! பிள்ளை வந்து விட்டான்!' என்ற புதிய நம்பிக்கை தளிர் விட்டது அவள் மனத்தில். அதற்குத் தகுந்தாற்போல் பட்டாளத்திலிருந்து திரும்பிய கையோடு சாமியய்யாவுக்குப் பட்டணத்தில் ஓரிடத்தில் காரோட்டும் வேலையும் கிடைத்தது.

ஆறேழு வருஷங்கள் கஷ்டமில்லாமல்தான் ஓடின. சங்கரிக்கு மூன்றாவது குழந்தை பிறந்த பிறகுதான் நிலைமை முள்ளாக உறுத்தத் தொடங்கியது. சாமியய்யா கிண்டிப் பக்கம் கவனம் செலுத்த ஆரம்பித்தான். கடுகடுப்பும் எரிச்சலும் குழந்தைகளை அறைவதுமாக அவன் சுபாவமே பயங்கரமாக மாறி விட்டது. வீட்டில் அவன் தங்குவதே சொற்பம்; அந்தச் சொற்ப அவகாசத்திலும் அவனும் அவர்களைப் பொருட்படுத்திப் பேச மாட்டான்; அவர்களுக்கும் அவனை நெருங்கிப் பேசப் பயம்.

சானுவின் உரமேறிய கரங்களை மீண்டும் உழைப்பு 'வா வா' என்று அழைத்தது. என்ஜினீயர் சாம்பசிவத்தின் வீட்டில், சமையலறையில் சானுவின் கை மணத்தது. மாதம் இருபது ரூபாய் சம்பளம், சாப்பாடு போக! இரண்டொரு துணிமணிகளும் அவ்வப்போது கிடைத்தன. நாள் தோறும் மிஞ்சும் ரசம், குழம்பு போன்றவைகளை வீட்-

# cali–cloth

காலி-கிளாத் ரீட்டேல் கடைகளில் கிடைக்கும்: பங்களூர், ஸில்வர் ஜூபிலி பார்க் ரோடு, கல்கத்தா, 1, லின்ட்ஸே ஸ்டிரீட்; 29, வாடர்லூ ஸ்டிரீட், பம்பாய், 129, நியூ சர்னி ரோடு, அஹமதாபாத், குபேர் நிவாஸ், ரிலீப் ரோடு; காலிகோ மில்ஸ் காம்பவுண்ட், மதராஸ், தன் பில்டிங், 175, மவுண்ட் ரோடு நியூ டில்லி, 6/30 — 31, அஜ்மல்கான் ரோடு, கரோல்பாக், காட்டன் அன்ட் கிளாத் பிரைவேட் லிட்., 302, கல்பாதேவி ரோடு, பம்பாய்-2, 524, சான்டஹர்ஸ்ட் ரோடு, பம்பாய்-4.

## காலி–கிளாத்



இக்கு எடுத்துச் செல்லவும் எஜமானி அனுமதி கொடுத்தாள்.

மளமள வென்று நாலைந்து தூற்றல் பெரிதாக விழத் தொடங்கியதும் சிந்தனையின் சரம் அறுந்து விட்டது! சிவ விஷ்ணு ஆலயம் வந்து விட்டதைச் சானு உணர்ந்தாள். சாலையைக் குறுக்கே கடந்து பின்னாலேயே வீற்றிருக்கிற சித்தி விநாயகனுடைய சந்நிதியை அடைக்கலமாகக் கொண்டாள்.

மழை வலுக்கத் தொடங்கியது. பெரிய பெரிய மழை முத்துக்கள் 'டப் டப்' என்று தலைக்கு மேலேயிருந்த சார்புத் தகரத்தில் விழுந்து ஓசையிட்டன. மழையின் சாரல் மேலே விழாமல் இருப்பதற்காகப் பின்னால் நகர்ந்து திரும்பியவள் திடுக்கிட்டு விட்டாள்.

மிக அருகிலிருந்த நவக்கிரக மண்டபத்தில், வாழைத் தண்டு விளக்குகளின் பால் ஒளியில், ஒரு கவரோரமாக நின்று நவக்கிரகமூர்த்திகளையே பார்த்துக் கொண்டிருப்பது அவள் பிள்ளை சாமியய்யாதானா?

சாமி, கடவுள் என்பவற்றுக்கும் சாமியய்யாவுக்கும் வெகு தூரம். வீட்டில் பூஜை, புனஸ்காரம் ஒன்றும் கிடையாது. இன்றைக்கு நவக்கிரக மேடையின் அருகில் அவன் நின்ற காட்சி நம்பக் கூடாததாக இருந்தது.

'பெரிய தொகையாக எதையாவது குதிரை வாயில் கொடுத்து விட்டு மனம் பேதலித்து ஈசுவரனை நாடி ஓடி வந்திருக்கிறானோ?' என்றுகூடச் சானு எண்ணினாள். இரக்கமாக இருந்தது அவளுக்கு!

சற்று நிமிர்ந்து, சுவரோரமாகப் போய் உன்னை பார்த்தாள். சாமியய்யாவின் கவனம் முழுவதையும் ஈர்த்திருந்த விக்கிரகத்தினடியில் சூரியன் என்று எழுதிய சிறு பலகை காணப்பட்டதைப் பார்த்ததும் வியப்புத் தாங்க முடியவில்லை சானுவுக்கு.

'சூரியனா—? சூரிய பகவானிடம் இவனுக்கு என்ன வேலை?'

திடீரென்று சாமியய்யா திரும்பி வெளியே வர முயல்வது தெரிந்தது. இனியும் அங்கே தான் நின்றால் அவன் தன்னைப் பார்த்து விடக் கூடும் என்று அஞ்சி அங்கிருந்து நகர்ந்து வாசலுக்கு வந்து விட்டாள் சானு.

தூற்றல் இப்போது மட்டுப்பட்டிருந்தது; மெல்லிய சாரல்கள்தாம் விழுந்தன. முன்றானைத் தலைப்பை இழுத்துத் தலையில் போர்த்திக் கொண்டு வீட்டை நோக்கிக் குழம்பிய மனத்துடன் நடந்தாள். உடம்புக்குள் கதகதவென்று ஏதோ பொங்கி வருவது போலிருந்தது; கண்கள் எரிந்தன; காலின் ரணம் மழை நீரில் படும் போதெல்லாம் வலி பிராணன் போவது போலிருந்தது.

அன்று வீடு வந்து படுத்தவள்தான். காலையில் கண் திறவாதவண்ணம் ஜுரம் வந்து விட்டது! எழுந்திருக்கவே முடியவில்லை.

எல்லாரும் அவளைச் சுற்றித் துக்க முகத்துடன் இருந்தார்கள். சாரங்கன் பாட்டியை விட்டு நகரவே இல்லை; சின்னக் குஞ்சு பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தான். 'ஆஜி, ஆஜி' என்று பாட்டியிடம் அவனுக்கு உயிர். "இப்படிப் படுத்துக் கொண்டு விட்டீர்களே, அம்மா!" என்று சங்கரி நிமிஷத்துக்கு ஒரு தடவை வந்து கண்ணால் ஜலம் விட்டு விட்டுப் போய்க் கொண்டிருந்தாள்.

சாமியய்யா மட்டும் அவளிடம் வரவில்லை. வீட்டில் பெற்ற அன்னை படுத்த படுக்கையாகக் கிடக்கிறாள் என்ற உணர்வு அவனுக்கு இல்லை என்று சொல்ல முடியாது. ஆனால் அதையும் மீறிய ஏதோ கவலைக்கும் பரபரப்புக்கும் அவன் ஆளாகியிருக்க வேண்டும்.

"சாமி வந்து சாப்பிட்டு விட்டுப் போய் விட்டானுடீ, சங்கரி?"

"வருகிற சமயம்தான் அம்மா! ஆனால் அவர் இரண்டு நாட்களாக வேலைக்கே போகவில்லை என்று தோன்றுகிறது. அவர் இப்படி இருந்ததே இல்லை. எனக்கு நினைத்தால் வயிற்றைக் கலக்குகிறது!" என்றாள் சங்கரி.

"அசடே! ஏன் மனசைக் குழப்பிக்கொள்கிறாய்? எல்லாம் நல்லதுக்குத்தான். இப்போ சாமி மனசு மாறிக் கொண்டு வருகிறது. ஸ்வாமி அவன் மனசை நல்லதாகத் திருப்பிக் கொண்டிருக்கிறார்!" என்றாள் சானு.

சாமியய்யா வந்தான், சாப்பிட்டான், போனான். அவன் வந்த போதும், இருந்த போதும், நகர்ந்த போதும் வீடு முழுக்கக் கப்சிப் என்று இருந்தது. குழந்தைகள் எல்லாம் சுவரோரமாக ஒன்றிக் கொண்டு மூச்சுப் பேச்சின்றி இருந்தன. சானுகூட வலியைப் பல்லைக் கடித்துக் கொண்டு அடக்கிக் கொண்டிருந்தாள். ஆனால் எதிர்பார்த்தது நடக்கவில்லை; வானம் பொய்த்து விட்டது: அன்பு மழை விழவில்லை!

பெருமூச்செறிந்தாள் சானு.

அன்று இரவெல்லாம் சானுவுக்கு நல்ல ஜுரம். கண்ணை திறக்காமல் அலட்டிக் கொண்டிருந்தாள். யார், யாரோ அண்டை அசல் வைத்தியங்களெல்லாம் தங்கு தடையின்றி நடந்து கொண்டிருந்தன. நான்கு நாட்கள் சானு படுத்த படுக்கையாகக் கிடந்தாள்.

நாலு நாட்களில் முதல் இரண்டுநாட்கள் சாமியய்யா திடுமென்று உள்ளே வருவதும் தாயின் காலையே உற்றுப் பார்ப்பதும் மீண்டும் வெளியே போவதுமாக இருந்தான். மணி ஆக, ஆக — நாள் கழியக் கழிய அவனுள் ஒரு பரபரப்பு உருவாகி, அதிகரித்துக் கொண்டே வருவது தெரிந்தது. மூன்றும் நாள் சாயங்காலம் விளக்கு வைக்கிற நேரத்தில் வெளியே போனவன் எப்போது வந்தான் என்றே தெரியவில்லை.

நடுநிசியில் காலடியில் ஏதோ உராய்ந்த உணர்ச்சி ஏற்பட்டுத் திடுக்கிட்டுக் கண் விழித்தாள் சானு. கண் எதிரே பார்த்த காட்சியை அவளால் நம்ப முடியவில்லை.

காலடியில் கூப்பிய கரங்களுடன் நின்றிருந்தது அவள் பிள்ளைதான்; சாமியய்யாதான்!

"குழந்தை" என்று கூப்பிட வாய் திறந்தாள் சானு. ஆனால் அதற்குள் விடுவிடுவென்று வெளியேறி விட்டான் சாமியய்யா!

எப்படித்தான் பொழுது விடியும் வரை இந்த அதிசய அனுபவச் செய்தியை மனத்



''என்ன பாகவதர்வாள்! காண்மன் போர்டைப் பார்த்துக் கோபமா இருக்கேள்?''

''இந்தப் போர்டைப் பார்த்தால் சின்னக் கச்சேரியா பெரிய கச்சேரியா என்று தெரிந்துவிடும். பெரிசா இருந்தால் பாதாம் ஹல்வாவில் ஆரம்பித்துப் பிரமாதமாகப் போகும். இன்றைக்கு என் கச்சேரிக்குப் போர்டு போட்டிருக்கிற போக்கடாத்தனத்தைப் பார்த்தீரா!''

துள் அடக்கிக் கொண்டிருந்தாளோ? விடிந்தும் விடியாததுமாக எல்லாரையும் அருகில் அழைத்து அதை விவரிக்க ஆரம்பித்து விட்டாள். குழந்தைகள் ஆச்சரியத்துடன் கேட்டுக் கொண்டிருந்தன. கண்ணீர் மாலை மாலையாக வழியச் சங்கரி அருகில் நின்றாள்.

''சுவாமி, ஏழுமலையானே! உன் கருணையே கருணை! என் பிள்ளையின் காதில் என் குரலைக் கேட்கச் செய்து விட்டாய்! இனி நான் சாகவும் தயார்!''

சாந்தி தேவதை மஞ்சள் கிரணங்களின் மீது ஆரோகணித்து மேற்கிலிருந்து ஊருக்குள் புகுகையில் —

''சங்கரி! வாசலில் ஏதோ நிழல் தட்டுகிறதே! அவன் தான் போலிருக்கிறது. சீக்கிரம் போய்ப் பார்!'' என்றாள் சானு.

சங்கரி பரபரப்புடன் வாசலுக்கு வந்து பார்த்தாள். யாரோ புது ஆள் அரும்பு மீசையும் கொட்டை விழிகளுமாக நின்று, ''இதுதானே டிரைவர் சாமியய்யா வீடு!'' என்று விசாரித்துக் கொண்டிருந்தான்.

''ஆமாம்!'' என்று சொல்லும் போதே ஏதோ விபரீதச் செய்திதான் வந்திருக்கிறது என்ற உணர்வு ஏற்பட்டு, சங்கரியின் குரல் பதறியது.

''நான் அவர் சிநேகிதன். எனக்கு அவருடைய அம்மாவைப் பார்க்க வேண்டும்!'' என்றான் அவன்.

''இதோ இருக்கிறார்; இப்படி வாருங்கள்!''

அவன் உள்ளே வருவதற்குள் அவனைத் தொடர்ந்து அக்கம்பக்கத்திலுள்ள நாலைந்து பேர்களும் கூடவே வந்து விட்டார்கள்.

சானு அப்போதும் படுக்கையில்தான் கிடந்தாள்.

''வணக்கம், அம்மா! நான் சாமியய்யாவின் சிநேகிதன். அவரிடமிருந்து உங்களுக்கு ஒரு கடிதம் கொண்டு வந்திருக்கிறேன்!''

''கடிதமா? அவனிடமிருந்தா? என் பிள்ளையிடமிருந்தா? இப்போ அவன் எங்கே?''

''அவர் மிலிடேரியிலே சேர்ந்து வடக்கே போயிட்டார்!''

''என்னது?'' என்று பதறினாள் சானு.

காலின் புண்ணில் சீழ் வற்றி, உலர்ந்து விட்டது போல ஒரு பலத்த அடி அவள் நெஞ்சில் விழுந்து விட்டது நன்கு தெரிந்தது.

வாயில் துணியை அடைத்துச் சங்கரி 'கேவி'க் கொண்டு நின்றாள். காலடியில் நண்டும் சிண்டுமாகக் குழந்தைகள் நின்றன.

''இதோ அவர் கொடுத்த கடிதம்!'' என்று நீட்டினான் அவன். ஆனால் சானு அதைக் கைநீட்டி வாங்கவில்லை. மூத்த பேரன்தான் வாங்கிப் பிரித்துப் படித்தான்:

''ஒரு வாரமாக இடைவிடாது என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கும் அன்னையின் குரலைப் பின்பற்றி நான் போகிறேன். இதற்கு முன்னாலேயே நான் போயிருக்க வேண்டும். ஆனால் உன் உடல் நிலையை உத்தேசித்துக் காத்திருந்தேன். வடக்கே சீனப்படையினர் இந்திய மண்ணில் காலடி வைத்து விட்டதினால் இனியும் நான் தாமதிக்க இயலாது. ஆயுதங்களையும் வீரர்களையும் நான் ஏற்றிக் கொண்டு வாகனங்களை ஓட்டிச் செல்ல வேண்டும். நான் போகிறேன். என் காதில் ஒலித்த குரல் என்னை அழைக்கிறது.

— சாமியய்யா.''

வெகு நேரம் வரையில் வாய்மூடி மௌனியாகத் தலை குனிந்து உட்கார்ந்திருந்தாள் சானு. சங்கரியின் விம்மல் கேட்ட பிறகு தான் தலை நிமிர்ந்தாள் அவள்.

யாரோ சிரித்துக் கொண்டே சொன்னார்கள். ''கட்டின பெண்டாட்டியும் பெற்ற தாயும் இரவும் பகலும் கூப்பிட்ட குரல் காதில் விழவில்லையாம்; தேசத்தைக் காப்பாற்றப் புறப்பட்டு விட்டான்! தூ!''

சானு குரல் வந்த திசையைக் கோபத்துடன் விழித்துப் பார்த்தாள். பிறகு சங்கரியிடம் சொல்வது போல் கணீரென்ற குரலில் அங்கிருந்த அத்தனை பேருக்கும் நன்கு கேட்கும்படி உறுதியான குரலில் சொன்னாள்:

''சங்கரி! நம் சாமியய்யாவின் காதில் ஒலித்தது பெற்ற தாயின் குரலாக இல்லாமலிருக்கலாம். ஆனால் நம் எல்லாருக்கும் தாயான பிறந்த பூமித் தாயின் குரல்— பாரத அன்னையின் குரல். தாயை விடவும் தாய்நாடுதான் உயர்ந்தது. தாய்நாட்டைக் காப்பாற்றத்தான் அவன் போயிருக்கிறான். அவன் திரும்பி வரும் வரையில் உங்களைக் காப்பாற்றுவேன். அது வரையில் நான் சாக மாட்டேன்!''



# போர்முனை

அத்தியாயம் 36

## விடுதலைக்கு ஒரு வழி

ஆயுத பலமின்றி வீரத்தை மட்டுமே துணையாகக் கொண்டு போரிட்டுக் களைத்துச் சோர்ந்து போன துருப்பினரையும் அடிபட்ட அனைவருக்கும் ஆஸ்பத்திரிகளில் இடமின்மையால் ஒரு கப்பலை வைத்தியசாலையாக மாற்ற வேண்டிய நிர்ப்பந்தம்ஏற்பட்டதையும் எதிரியினால் கைதாக்கப்பட்டவர்களின் எண்ணிக்கையையும் பார்த்து விட்டு, நூற்றி ஐம்பது மைல் பின்வாங்குமாறு ஜெனரல்வேவல் உத்தரவிட்டால் அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லைதான். அவர் உலகக் கண்ணோட்டத்துடன் யுத்த அரங்கத்தை நோக்க வேண்டியவர். அப்படிப் பார்க்கும்போது, ஜெர்மானியரால் நேர்ந்து கொண்டிருக்கும் ஆபத்தைச் சமாளிக்க அகப்பட்ட போர்த் தளவாடங்களையெல்லாம் உடனடியாக ஐரோப்பாவிலும் ஆப்பிரிக்காவிலும் பல போர்முனைகளுக்கு அனுப்பி வைப்பதை அவர் குறை கூறிக் குற்றம் கண்டு பிடிப்பதற்கில்லை. ஆகவே, ஜப்பானியத் தாக்குதல் ஒருவேளை நடைபெறலாம் என்று சந்தேகிக்க இடமிருந்த சமயத்திலேயே மலாயாவின் பாதுகாப்புக்காகப் பலத்த ஏற்பாடுகளைச் செய்யாததை அவர் கண்டிப்பதற்குமில்லை. மலாயாவில் ராணுவ உபகரணங்களைக் கொண்டு குவிக்கக் கூடாது என்கிற எண்ணமில்லை பிரிட்டிஷாருக்கு. இரண்டு சக்தி வாய்ந்த எதிரிகளை ஒரே சமயத்தில் எதிர்த்துப் போராடத் தேவையான அளவுக்கு அவர்களிடம் யுத்ததளவாடங்களில்லை, அவ்வளவுதான். ஹிட்லர் முந்திக் கொண்டான். டாங்குகளும் விமானங்களும் அவனைச் சந்திக்கச் சென்றன. இந்நிலையில், மலாயா தீபகர்ப்பத்தில் கொஞ்ச நஞ்சம் இருந்த போர்க் கருவி

களிலும் பெரும்பாலானவற்றை ஜப்பானியரிடம் பறிகொடுத்து விட்டு நிற்கின்ற தருணத்தில், ஆட்களை மட்டும் அவர்களை எதிர்க்க ஏவி விடுவதென்பது யுத்த தந்திரமாகாது, தற்கொலைத் தந்திரமாகத்தான் முடியும். கசாப்புக் கடைகளுக்கு அனுப்பப்படும் ஆட்டு மந்தைகளாகச் சிப்பாய்களைக் கருதாமல், செத்தால் சாகட்டும் என்று விடாமல் பின்வாங்கச் செய்ததன் மூலம், மனிதத் தன்மையுடன் பிரிட்டிஷார் நடந்து கொண்டதைப் பாராட்டவேண்டும்! 'வயிற்றில் வெடிகுண்டுகளைக் கட்டிக் கொண்டு எதிரிப் பட்டாளத்தின் மீது பாய்ந்து பலத்த சேதத்தை விளைவித்து விடு. அம்முயற்சியில் உன் உயிர் நிச்சயம் பிரிந்து விடும். ஆனாலும் பரவாயில்லை' என்று ஜப்பானிய வீரர்களுக்குப் பிறப்பிக்கப்படும் உத்தரவுகளுக்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்?

இதனை அந்த ஜப்பானியத் தளபதியால் புரிந்து கொள்ள முடியாது. அவனுக்கு வேடிக்கையாகத்தான் இருக்கும். சந்தோஷத்துடன் ஒரு திருநாளைப்போல் இத்தினத்தைக் கொண்டாடுவார்கள்.

இவர்களுடைய கொண்டாட்டம் கன்னிப் பெண்களைக் கற்பழிக்கும் களியாட்டம், அகப்பட்டதைச் சுருட்டும் ஆர்ப்பாட்டம், நாடு நகரிலுள்ளோரின் திண்டாட்டம், வெள்ளைத் தோல் படைத்த கைதிகளை வேதனைக்குள்ளாக்கும் வெறியாட்டம்! சீ! மனிதர்களா இவர்கள்? மனித உருக்கொண்ட அரக்கர்கள்!......

தளபதியின் ஆணைப்படி சித்திரவதை ஆரம்பமாயிற்று. வடிவேலுவும் மற்றவர்களும் பலவந்தமாக அந்தப் பயங்கரத்தைக் காணுமாறு செய்யப்பட்டார்கள். உலகில் சொல்லி முடியாத பாபங்களையெல்லாம் செய்தவர்கள் நரகத்தில் கடுமையாகத் துன்புறுத்தப் படுவார்கள் என்பார்களே அதில் வடிவேலுவுக்கு அவ்வளவாக நம்பிக்கை கிடையாது தான். ஆனால் இன்று, ஜப்பானியத் தளபதி பூவுலகில் சிருஷ்டித்திருக்கும் இந்த நரகத்தைக் காட்டிலும் மேலுலகில் இருக்கக் கூடிய நரகம் கொடூரமாயிராது என்ற தீர்மானத்துக்கு வந்தான். ஆஸ்திரேலியர்களின் கால்களைக் கயிற்றினால் கட்டி மரக் கிளையிலிருந்து தலை கீழாகத் தொங்க விட்டுச் சவுக்கடி கொடுத்தார்கள். மோட்டார் காரின் 'பம்பரு'டன் கைகளை நீளமான கயிற்றினால் நன்கு பிணைத்து விட்டு, காரைக் கிளப்பி வேகமாய் ஓட்டிச் சென்றார்கள். கல்லிலும் முள்ளிலும், மேட்டிலும் பள்ளத்திலும், புழுதியிலும் சேற்றிலும் அந்த வெள்ளையரின் தேகங்கள் புரண்டன. ஆடைகள் கிழிய உடலெல்லாம் ரத்த விளாராக அவர்கள் பரிதாபமாகத் தோற்றமளித்தார்கள். எனினும் அவர்கள் அழவில்லை. ஹிம்சை செய்வதை நிறுத்தித் தங்களைக் கொன்று விடுமாறு கெஞ்சவில்லை. "எங்கள் உயிர் உன்னிடத்தில்தான் இருக்கிறது என்றாலும் நாங்கள் உன்னைக் காட்டிலும் எல்லா வகையிலும் உயர்ந்தவர்கள், கர்வம் மிக்கவர்கள், ஆஸ்திரேலியவின் ஆணவம் கலபத்தில் அழியாது!" என்றான் அவர்களில் ஒருவன். கிழிந்து தொங்கும் உதடுகளை அசைப்பதே அவனுக்கு வேதனையாகத்தான் இருந்திருக்கும். என்றாலும் அவன் பேசினான்.

"நீ சாவதற்கு முன்னால் என் பூட்ஸ்களை முத்தமிடச் செய்வேன்!" என்று கத்தினான் ஒஹமோட்டோ ஆத்திரத்துடன். கையிலிருந்த மதுவை ஆஸ்திரேலியன் முகத்தில் விசிறி அடித்தான். ரத்தக் காயங்களில் சாராயம் பட்டால் எப்படி இருக்கும்? எரிச்சலாவது எரிச்சல்! நினைத்துப் பார்க்கவே கஷ்டமாக இருந்தது வடிவேலுவுக்கு.

அச்சமயத்தில், "டுமீல், டுமீல்!" என்று இரு முறை துப்பாக்கி வேட்டு தீர்க்கும் சத்தம் கேட்டது. ஆஸ்திரேலியர் இருவரும் வயிற்றைப் பிடித்துக் கொண்டு பின்னோக்கி நகர்ந்தார்கள். ஒஹமோட்டோ பக்கமாகக் கால்களை நிந்தனையுடன் உதைப்பது போல் நீட்-



டியவாறு மல்லாந்து விழுந்து இறந்த தன் மூலம் அவன் வாக்கை உடனுக்குடன் பொய்யாக்கினார்கள்.

பரபரப்புடன் இப்படியும் அப்படியுமாகப் பார்த்தான் தளபதி. தயாள சிந்தையுடன் அந்த வெள்ளையரின் உயிர்களைப் பறித்தவன் யார் என்று தேடினான். அவனைக் கண்டு பிடிப்பதும் கடினமாக இல்லை. பக்கத்திலிருந்த ஜப்பானிய சிப்பாய் சற்று அசிரத்தையாக இருந்த போது அவன் இடையிலிருந்து கைத் துப்பாக்கியை உருவி எடுத்த கூர்க்கா ஒருவன் அவற்றிலிருந்த தோட்டாக்களுள் இரண்டினை இன்னல் தீர்க்கப் பயன்படுத்தி விட்டு மூன்றாவதாக ஒன்றினை வஞ்சம் தீர்க்க உபயோகிக்க இருந்தான். தளபதி ஒஹமோட்டோவின் உயிரைப் பறிப்பதற்கு அவனை ஜப்பானியர் அனுமதிக்கவில்லை. ஏழெட்டுப் பேர்களாக அவன் மீது பாய்ந்து, தினவெடுத்துத் திமிறிய அவனை வெற்றி கொண்டு கட்டிப் பிடித்து அழைத்துப் போனார்கள். தங்கள் தலைவன் எதிரே நிறுத்தினார்கள். நேபாளி கூர்க்காவை அலட்சியமாய் நோக்கினான் ஜப்பானியத் தளபதி. திடுமென அவனிடம் ஏதோ அக்கறை கொண்டவன் போல உன்னிப்பாய்க் கவனித்தான். பின்னர் அவன் முகவாயைப் பற்றித் தலையை உயர்த்தி முகத்தைக் கூர்ந்து ஆராய்ந்தான்.

"நீ இந்தியனல்லவோ? உண்மையைச் சொல்லி விடு. எந்த நாட்டைச் சேர்ந்தவன்?" — பாதி தாய் மொழியிலும் இன்னும் பாதி ஆங்கிலத்திலும் அவன் கேட்டது அந்தக் கூர்க்காவுக்கு ஒன்றும் விளங்க வில்லை. அவன் விழித்தான்.

"இவனை இழுத்துப் போய் உங்கள் சாமர்த்தியத்தைக் காட்டுங்கள்" என்று சேனாபதியிடமிருந்து ஆணை பிறந்தது. கூர்க்கா விசனத்தை வெளிக் காண்பித்துக் கொள்ளாமல் திரும்பிய அதே கணத்தில் அவன் உச்சிக் குடுமி ஒஹமோட்டோவின் கண்களில் தென்பட்டு விட்டது. உடனே, "காந்திகா! நில்லுங்கள்! காந்திகா!" என்று ஆச்சரியத்துடன் கூவினான் அவன். கூர்க்காவின் சின்டை இரண்டு தடவை தட்டி விட்டு விட்டுக் கைதிகள் நின்ற பக்கமாய்த் திரும்பினான். "இந்திய வீரர்களிடம் எனக்குள்ள நல்லெண்ணத்துக்கு அடையாளமாக இவன் செய்த பெருங் குற்றத்தையும் மன்னித்து விட்டு விடுகிறேன். இதன் மூலமாகவாவது ஜப்பானியரை விரோதித்துக் கொள்ளாமல் நட்புரிமையுடன் பழகி ஒத்துழைப்பது எவ்வளவு நல்லது என்பதைக் கண்டு கொள்வீர்கள் என்று நம்புகிறேன்!" என்று கூறினான்.

'ஏதோ ஓர் உள் நோக்கத்துடன் தான் இவன் இவ்வாறெல்லாம் நடந்து கொள்கிறானோ? இந்தியச் சிப்பாய்களைப் பயமுறுத்துவதும் அவர்களுக்கு ஆசை காட்டுவதும் பசப்பு வார்த்தைகளையும் அன்பு மொழிகளையும் அவர்கள் எதிரே கலந்து கொட்டுவதும் எதற்காக?' என்று வடிவேலு எண்ணலானான். 'எப்படியானாலும் இந்த நீசர்களிடம் இனி சிறைப்பட்டிருக்க முடியாது. எப்பாடுபட்டேனும் தப்பி ஓட முயலவேண்டும்.' இந்த உறுதியுடன் அன்றிரவு படுக்கப் போனான் வடிவேலு. ஆயினும் தப்பி ஓடக் கூடிய சந்தர்ப்பம் எளிதில் வாய்க்கவில்லை. தாற்காலிகமாக ஆரம்பிக்கப்பட்ட அந்தக் கைதிகள் முகாம் நிரந்தர சிறைச்சாலையாகவே மாற்றப்பட்டது. பாதுகாப்புகள் பலமாக்கப் பட்டன. நாலைந்து நாட்களில் ஒஹமோட்டோ அந்தப் பங்களாவிலிருந்து சென்று விட்டான், தன் சைன்யத்துக்குத் தலைமை தாங்கித் தெற்கு நோக்கி மேலும் முன்னேற. சிறைச்சாலை அதிகாரியாக வேறு ஒருவன் நியமிக்கப்பட்டான். புதிதாகப் பல கைதிகள் வந்து சேர்ந்தார்கள். ஜப்பானியக் காவல் வீரர்களும் அதிகரித்தார்கள். நாட்கள் சென்று கொண்டே யிருந்தன. எத்தனை தினங்கள் என்று கணக்கும் மறந்து போய் விட்டது வடிவேலுவுக்கு. பத்து, இருபது, முப்பது நாட்கள்கூட இருக்கலாம். நாளாக ஆக, அவனுக்குத் தப்பி ஓட வேண்டும் என்ற அரிப்பும், அது காரியசாத்தியமாகாதோ என்கிற எண்ணத்தினால் எழும் மனப் புகைச்சலும் அதிகரித்துக் கொண்டே போயின. இப்படி அவன் மனம் புழுங்கித் தவித்தபடியே இருப்புக் கொள்ளாமல் முகாமுக்குள் அலைந்த போதிலும் அடியோடு நம்பிக்கை இழந்து விடவும் இல்லை. அதற்குக் காரணம் ஒரு சிறு பெண். அவள் அன்றாடம் ஒரு கூடையில் முட்டைகளை வைத்து எடுத்துக் கொண்டு அந்தப் பங்களாவுக்கு வந்து போனாள். சிறைச்சாலை அதிகாரிக்குத் தினந்தோறும் நல்ல முட்டைகளைக் கொண்டு வந்து கொடுத்தாள். அந்தப் பெண்ணைப் பார்த்த மாத்திரத்திலேயே தமிழ் நாட்டவள் என்று தெரிந்து கொண்டான் வடிவேலு.

அவர்களிடையே நட்பு நிலவியது: சிறுகச் சிறுக இதயங்களுக்கிடையே இடைவெளி குறைந்தது: நெருக்கம் மிகுந்தது: வார்த்தை பிறந்தது: வாக்கியமாக வளர்ந்தது. ஜப்பானியக் காவல் வீரர்கள் இதனைக் கண்ணால் கண்டார்கள். ஆனால் பொருட்படுத்தவில்லை. சிறுமிதானே என்ற அலட்சியம் ஒரு புறம், அவ்விருவருக்கு மிடையில்



கொஞ்சம் கொஞ்சமாக அந்நியோந்நிய பாவம் அதிகரித்து வந்தது மற்றொரு காரணம். குழந்தை நாள்தோறும் வளரத்தான் செய்கிறது என்றாலும் தினம் தினம் அருகிலிருந்து பார்க்கையில் நம் கண்களுக்கு அதன் வளர்ச்சி புலனாகாதது போல, இந்தச் சிநேகத்தின் வளர்ச்சியும் அவர்களுக்குத் தெரியவில்லை.

ஆரம்பத்தில் அவனை அடித்து விரட்டியவர்கள் பிறகு ''சூ! சூ''வென்று அதட்டி மிரட்டினார்கள், அப்புறம் கழுகுப் பார்வையை வீசுவதுடன் நிறுத்திக் கொண்டனர்; அதன் பிறகு தாங்களே புன்னகை சிந்தி அவர்கள் சந்திப்பை வரவேற்கத் தொடங்கினார்கள்.

இந்தச் சந்திப்பின் போது ஒரு நாள் வடிவேலுவின் பக்கமாய் முள்வேலியைத் தாண்டி ஏதோ ஒன்று பறந்து

வந்தது. கண்ணிமைக்கும் நேரத்தில் அதனைப் பிடித்து ஆடைக்குள்ளே ஒளித்துக்கொண்ட வடிவேலு, வழக்கம்போல அவனுக்குச் சிரித்த முகத்துடன் கரம் அசைத்து முகமன் கூறினான். இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டு விடை கொடுத்து அனுப்பினான்.

அவன் வீசியபொட்டலம் அவன் நெஞ்சோடு நெஞ்சாகக் கனத்தது. அவள் தனக்குக் கொடுத்தது என்ன என்று பிரித்துப் பார்க்கத் துடித்தன அவனது கரங்கள். அவசரப்பட்டுக் காரியத்தைக் கெடுத்து விடாமல் தக்க சந்தர்ப்பம் கிடைக்கும் வரை காத்திருந்தான் வடிவேலு. காவலர் தான் இருந்த பக்கம் கண்ணோட்டம் செலுத்த வில்லை என்பது உறுதியானபோது மிக ஜாக்கிரதையாக அந்தக் காகிதப் பொட்டலத்தைப் பிரித்தான். உள்ளே இருந்தது, ஒரு 'கட்டிங் பிளேயர்'. கசங்கிய காகிதத்தில் ஏதோ எழுதி யிருந்தது. மடிப்புக்களை நீக்கிச் சமன் படுத்தி விட்டுப் பார்த்தான். அந்தப் பிரதேசத்தின் படம் வரையப்பட்டிருந்தது அதில். ரப்பர்த்தோட்டம், அதிலுள்ள கைதிகள் முகாம், சாலை, அதனை அடுத்த காடு, அதன் மையத்தில் சிறியதொரு கிராமம், ஏழெட்டுக் குடிசைகள் இவை குறிக்கப் பட்டிருந்தன. அந்தக் குடிசைகளுள் ஒன்றினைச் சுட்டிக் காட்டும் அம்புக் குறியிட்டு 'இங்கே நாங்கள் வசிக்கிறோம்' என்றும் எழுதப்பட்டிருந்தது. திசைகளும் காண்பிக்கப்பட்டிருந்தன. கையில் கனத்த ஆயுதத்தைப் பார்த்தான் வடிவேலு. முள் வேலிக் கம்பிகளை வெட்டக் கூடிய சக்தி படைத்ததுதான் அது. அதோடு வேலிக் கம்பிகளில் பாயும் மின்சாரத்தினால் தாக்குண்டு மடியாமல் இருக்க வசதியாக அதன் கைப் பிடிக்கு ரப்பர் உறை கவசமாகப் போடப்பட்டிருந்தது. எவ்வளவு முன்னெச்சரிக்கையுடன் காரியம் செய்திருக்கிறார்கள்! வடிவேலுவின் கண்கள் நன்றிப் பெருக்கிலே கலங்கின. பொட்டலமாக அதனை மறுபடியும் கசக்கி மடித்து ஆடைக்குள் மறைத்துக் கொள்கிற போதுதான் தன் பக்கத்திலேயே நேபாலி—அன்று ஒஹமோட்டோவினால் மன்னிக்கப்பட்டவன் — நின்று தன் செய்கைகளையே உற்றுக் கவனித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான் வடிவேலு. 'நானும் உன்னுடன் வரச் சம்மதிக்க மாட்டாயா?' என்று கூர்க்காவின் கண்கள் இறைஞ்சின. அன்புடன் அவன் தோள்களைத் தட்டிக் கொடுத்துப் புன்முறுவலினால் சம்மதம் தெரிவித்தான் வடிவேலு.

## அத்தியாயம் 37

# மாண்டவன் மீண்டால்...?

**கை**திகள் முகாமைக் கண்காணிக்க வசதியாக மேல் கூரையுடன் கூடிய உயரமான பீடம்போல் அமைந்திருந்த காவல் நிலையத்தில் கடிகாரம் ஐந்து முறை அடித்து ஓய்ந்தது.

அந்த அதிகாலை நேரத்தில் நேபாலியும் தமிழனும் கடைசி கடைசியாக ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் கொண்டார்கள். ரகசியக் குரலில் தங்கள் தங்கள் பாஷையில் ஒருவரையொருவர்



உளமாற வாழ்த்தினுர்கள். தரையில் படுத்து வேலிக் கிடையில் உண்டாக்கி யிருந்த சிறிய இடைவெளி வழியே சர்வ ஜாக்கிரதையாக ஊர்ந்து மெல்ல மெல்ல நகர்ந்தார்கள். அதைத் தாண்டியதும் எழுந்தார்கள்; ஓட்டம் எடுத்தார்கள். வடிவேலுவின் மார்பு விடுதலே பெற்ற பூரிப்பால் வெடித்து விடும் போல் விம்மி யது. அடுத்துப் பேரிடி ஒன்று அவன் தலையில் விழுந்தது. இடிதானு? அல்லது இதயம் பிளந்த ஓசையா? இரண்டும் இல்லே. அந்த முட்டாள் கூர்க்கா ரப்பர் பால் ஏற்றிச் செல்லும் வண்டி ஒன்றின் மீது அவசரத்தில் கண் தெரியாமல் மோதிக் கொண்டிருக்கிறுன்.

காவல் நிலேயத்தில் திடுக்கிட்டு விழித் துக் கொண்டவர்களாய் ஜப்பானிய வீரர்கள் கூச்சல் போட்டார்கள். இரு ளேக் கிழித்துக் கொண்டு மிஷின் கன்கள் சத்தம் கேட்ட திக்கை நோக்கி அனலேக் கக்கின. கைதிகள் தப்பி ஓடுவதை அறிவிக்க ஸைரன் ஊத ஆரம்பித்தது. ஸர்ச் லேட்டுகள் பல சுற்றுப்புறத்தை யெல்லாம் ஒளி வெள்ளத்தில் ஆழ்த் தின. திபு திபுவென்று வீரர்கள் பலர் ஓடிவந்தார்கள். சிட்டாகப் பறந்தான் வடிவேலு. மரங்களில் முட்டி மோதிக் கொண்டான். சகதியில் சறுக்கி விழுந் தான். பள்ளங்களில் விழுந்து புரண் டான். என்றுலும் எங்குமே கண நேரம் கூடத் தாமதியாமல் எழுந்து ஓடினுன்.

ஓடியவாறே பின்னுேக்கித் தலேயைத் திருப்பினுன் வடிவேலு. இப்போது மூன்றே ஜப்பானியர்தான் அவர்களே விடாப் பிடியாகப் பின்பற்றி ஓடிவந்து கொண்டிருந்தார்கள். எதிரே சில குடி சைகள் தென்பட்டன. ஒருவேளே அந் தக் காகிதத்தில் குறிப்பிட்டிருந்தது இந் தக் கிராமம்தானே?

வன விலங்குகளால் ஆபத்து நேரா திருக்கப் பரண் வீடுகளாய் அமைந் திருந்த குடிசைகளே நெருங்கி விட்டான் வடிவேலு. ஜப்பானியரும் அணுகிவிட் டார்கள். 'டுமீல், டுமீல்' என்று அவர் களது துப்பாக்கிகள் இயங்கின. கூர்க்கா அலறியபடியே அருகே யிருந்த ஓர் ஆழ மான வாய்க்காலில் விழுந்தான். ஒரு விஞடி தயங்கித் திரும்பினுன் வடிவேலு. கண்ணிமைக்கும் அந்நேரத்தில் ஜப்பா னியரில் ஒருவன் நெஞ்சைப் பிடித்துக் கொண்டு குப்புற விழுவதைக் கண்டான். அதே சமயத்தில் வடிவேலுவின் தோளே மேலெழுந்த வாரியாக மேய்ந்து கொண்டு ஒரு தோட்டா பாய்ந்து சென் றது. சட்டென்று கூர்க்காவுக்கு அரு கிலேயே பள்ளத்தில் விழுந்தான் வடி வேலு. நேபாளியின் உடல் அஷ்ட கோணலாக நெளிவதையும் ஒரு கரம் மண்ணேப் பிசைவதையும் பின்னர் பிடி தளர்வதையும் கண்டான். அப்புறம் அவன் அசையவே யில்லே.

அடிபட்ட இடத்தில் வடிவேலுவுக்கு ரத்தம் பீறிட்டுப் பெருகிச் சட்டையை நனைத்தது. 'நல்லதுதான்' என எண்ணிக் கொண்டான் அவன். வேதனேயைத் தான் அனுபவிப்பதை மூகத்தில் காட் டாமல், கண்களே மூடியபடி, அசங்கா மல், மூச்சுக்கூட விடாமல் சவமாகப் படுத்துக் கிடந்தான். ஜப்பானியர் இரு வரும் அவர்கள் இறந்து விட்டதாய்த் தீர்மானித்தார்கள். திரும்பிப் போக யத்தனித்தார்கள். பின்னர் மனம் மாறி யவர்களாய்த் தயங்கினுர்கள். கண் ணிமை மயிருக்கும் கன்னத்துக்கும் இடையே இருந்த இடுக்குவழியாக இதை யெல்லாம் கவனித்தான் வடிவேலு. தப்பிய கைதிகள் இருவரும் சந்தேகத் துக்கு இடமின்றி இறந்துதான் விட் டார்கள் என்பதை மறுமுறை சுட்டு நிச்சயப்படுத்திக் கொள்ள அந்த ஜப் பானியர் துப்பாக்கிகளே உயர்த்திக் குறி பார்ப்பதைக் கண்டான்.

அடுத்த கணம் அவர்களில் ஒருவன் வீறிட்டு அலறிக் கொண்டு தரையில் சரிந்தான். அவன் கையிலிருந்த துப் பாக்கி வடிவேலுவுக்கு அருகில் பூமி யைத் தாக்கியது. அதை எடுத்து மற் ருெருவனேப் பழி வாங்கலாமா என்று யோசிப்பதற்குள் இரண்டாவது ஜப்பா னியனும் கதறித் துடித்தபடியே சுருண்டு விழுந்தான். வடிவேலுவுக்கு ஒரே வியப் பாகப் போயிற்று. கனவுலகில் நடப்ப வனேப் போல மெல்ல எழுந்து வந்து மூன்று ஜப்பானியரையும் அதிசயத் துடன் பார்த்தான். மூவர் உடலிலும் கூரிய அம்புகள் பாய்ந்திருந்தன.

பரண் வீட்டிலிருந்து ஏணி வழியாக இறங்கி வந்தான் ஒருவன். ''அவை விஷ பாணங்கள். நொடிப் பொழுதில் கொடிய நஞ்சை ரத்தத்தில் கலந்து உடல் முழுவதும் பரவச் செய்யும். வழ வழப்பான இந்த ஊதுகுழலே உபயோ கித்து நச்சுத் தோய்ந்த அம்புகளேப் பிர யோகிக்கும் கலே கானகத்தில் வாழும் மலாய்க்காரர்களிடம் நான் கற்றுக் கொண்டது. இந்த ஜப்பானியரால் இனி உங்களுக்குத் தொல்லே கிடையாது. வீட்டுக்கு வாருங்கள், இளேப்பாறலாம்'' என்று கூறி அழைத்துப் போனுன்.

நடந்து செல்கையில், ''கற்பகம் உங் களேப் பற்றித் தினம் தினம் வாய் ஓயா மல் சொல்வாள். உங்களுக்கு எப்படி யாவது உதவ வேண்டும் என்று பிடி வாதம் செய்தாள். அவள் நச்சரிப்பினுல்

தான் 'கட்டிங் பிளேய'ரையும் வழி காட்டும் படக் குறிப்பையும் அவன் மூலமாக உங்களுக்கு அனுப்பி வைத்தேன். உங்கள் வருகையை எதிர்நோக்கி வாசலிலேயே காத்திருக்கத் தீர்மானித்தோம். அதுதான் எவ்வளவு நல்லதாயிற்று?'' என்று சொன்னான்.

மேல் படியில் கற்பகம் நின்று கைகொட்டிக் குதூகலித்தாள். ''கற்பகம்! கற்பகம்!'' என்று சிறுமியைக் கட்டித் தழுவிக் கொண்டான் வடிவேலு. ''ஜப்பானியரைப் போன்ற கொடூரச் சித்தம் படைத்த அரக்கர்கள் ஆயிரக் கணக்கில் இருந்தால் தான் என்ன? உன்னைப் போன்ற கற்பகப் பயிர்கள் உள்ளவரையில் உலகுக்கு உய்வுண்டு'' என்று கூறிக் கண்ணீர் உகுத்தான்.

''மாமா! காயம் ரொம்ப வலிக்கிறதா? அழாதே, மாமா! மருந்து போட்டுக் கட்டிவிடுகிறேன்'' என்றாள் கற்பகம்.

ஃ ஃ ஃ

இரண்டு நாட்கள் அந்தத் தமிழ்க் குடும்பத்தின் அன்பில் திளைத்தான் வடிவேலு. அதற்கு மேலும் அங்கு தாமதித்தால் அந்த ஏழைகளுக்குச் சோதனையாக முடியும் என்பதை உணர்ந்து தனக்கு விடை கொடுத்து அனுப்புமாறு கேட்டுக் கொண்டான். குடும்பத் தலைவன் மறுத்துப் பேசவில்லை. ஒரு லுங்கியையும் சட்டையையும் எடுத்துக் கொடுத்து, ''இதை அணிந்துகொள்ளுங்கள். மீண்டும் எதிரிகளிடம் ராணுவக் கைதிகளாக அகப்பட்டுக் கொள்ளாதிருக்க இவை உதவும்'' என்றான்.

இதயபூர்வமான நன்றியைத் தெரிவித்துவிட்டுக் கிளம்பினான் வடிவேலு.

அவன் சிங்கப்பூரைச் சென்றடையு முன்னர் அது ஜப்பானியர் வசமாகிவிட்டது. வடக்கெல்லையிலிருந்து தெற்கு முனை வரை நானூற்றி ஐம்பது மைல் தூரத்தை எழுபதே நாட்களில் ஜப்பானியர்கள் ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டார்கள். குண்டுகளினால் அழிந்ததுபோக எஞ்சியிருந்த சர்க்கார் கட்டிடங்களில் ஜப்பானிய உதய சூரியன் கொடி பறந்தது. இந்தச் சரித்திர சம்பவத்தைக் காணச் சூரியனும் உதயமானான். அந்த அதிகாலை நேரத்தில் பிரிட்டிஷ் தளபதிகள் பலர், நடைபாதையில் திரண்டிருந்த ஆசியர்கள் எதிரே தெருவைப் பெருக்கிக் கொண்டிருந்தார்கள். 'பாராளப் பிறந்தவர்களைப் புழுதியைத் திரட்டுமாறு பணியவைத்துவிட்டோம்' என்று ஜப்பானியர் பரவச மடைந்திருக்கிறார்களா? 'ஐயோ! இது என்ன அநாகரிகம்!' என்று மனம் குமைந்தான் வடிவேலு.

இது மட்டும்தானா? அநாகரிக அக்கிரமங்கள் நகரில் எவ்வளவோ நடந்து கொண்டிருந்தன. அவற்றையெல்லாம் வேடிக்கை பார்த்து நேரத்தை வீணாக்க வில்லை வடிவேலு. அதற்கு அவன் மனம் இடம் கொடுக்கவு மில்லை. அவன் கால்கள் அவனை வேகமாகக் கதிரேசன் பங்களாவுக்கு அழைத்துப் போயின. நெஞ்சம் திக் திக்கென்று அடித்துக் கொண்டது அவனுக்கு. தந்தையும் மகளும் எவ்விதத் துன்பமுமின்றிச் சுகமாக இருப்பதைக் காண வேண்டுமே என்று கவலையுடன் பிரார்த்தித்தபடி அவன் நடந்தான்.

விசாலமான அவர்கள் வீடு எப்போதும்போலக் கம்பீரமாகத்தான் காட்சி தந்தது. கேட்டைத் திறந்துகொண்டு அவன் உள்ளே அடியெடுத்து வைத்தான். 'அதோ! மாடி வராந்தாவில் நின்று தன்னை இமை கொட்டாது பார்ப்பது யார்?'

''குமாரி!'' என்று கூவி அழைத்தான் வடிவேலு.

''அத்தான்!'' என்ற சொல்லிலே காதலையும் மகிழ்ச்சியையும் ஆச்சரியத்தையும் கலந்து கொட்டிவிட்டு அவள் மறைந்தாள்.

வடிவேலுவுக்கு மேனி சிலிர்த்தது. அவன் உடலின் ஒவ்வோர் அணுவும் 'அத்தான்' என்ற சொல்லைத் திரும்பத் திரும்பக் கூறியவாறே ஆனந்த நடனம் புரிந்தது.

ஓட்டமாக ஓடிவந்தாள் குமாரி. ''அத்தான்! வந்து விட்டீர்களா? ராணுவக் காரியாலயத்தில் அந்த அசடுகள் சொன்னதை நான் நம்பவே யில்லை! என்னை விட்டு விட்டு நீங்கள் எங்கேயும் போய் விட மாட்டீர்கள் என்று எனக்குத் தெரியும்!'' இப்படிக் கூறிவிட்டு அவன் தோள்களில் முகம் புதைத்து விம்மி அழுதாள். கண்களைத் துடைத்துக் கொண்டு கலகலவென்று சிரித்தாள். அவன் கரங்களைப் பற்றி நெஞ்சுடன் சேர்த்து அணைத்துக்கொண்டாள். கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அவனைச் சுற்றிச் சுற்றி வந்தாள். அவன் நெற்றியையும் கன்னங்களையும் தோள்களையும் தொட்டுத் தொட்டுப் பார்த்துப் பேருவகையுற்றாள். தன்னை ஒரு நிலைப்படுத்திக் கொள்ள முடியாமல் பரிதவித்தாள் அந்தப் பேதை. பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டாம் என்றால் மாண்டவன் மீண்டால் அப்போது கங்கு கரையின்றிப் பிரவாகமாய்ப் பெருக்கெடுக்கும் மகிழ்ச்சிக்கு எவ்வாறு அவளால் அணை போட முடியும்? (தொடரும்)






'தின்பதற்கு மட்டுமல்லாது தின்னப்படுவதற் கென்றே அமைந்தாற் போன்ற பற்கள்.' என்று கவிஞர் வருணித்த கட்டழகுப் பல்வரிசை. அலங்கரிக்கப்பட்ட தேர் வருவது போல் நடக்கும் போது நடையையே திருவிழாவாக்கிப் பார்க்கச் செய்கிற கவர்ச்சி. வானவில்லைப் போல் அழகிய நிறங்கள் எல்லாமாய்ப் பொலிந்து நின்றாள்.

— இப்படியும் ஒரு பெண் பாத்திரம்.

"பெண்களின் பரிசுத்தம் சோதிக்கப் படுவதற்கு அக்கினிப் பிரவேசம் இருந்ததைப் போல் வறுமை வேதனைகளாலும் அறியாமை இருளாலும் துன்பப்படுகிற நாடு தன் பரிசுத்தத்தை நிரூபித்துக் கொள்ள உழைப்பையும் நம்பிக்கைகளையும் வேள்வித் தீயாய்ப் பெருக்கி அதன் ஒளி வெள்ளத்தில் மூழ்கி எழ வேண்டும்."

— இப்படி நினைக்கும் ஒரு நண்பன்.





**பண்டிட் P.S. ராமசர்மாவின்**

# சக்தி சஞ்சீவி

**குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டிகளுக்கு.**

எமது வைத்யரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விவரம்
தங்கும் இடங்கள் வழக்கம்போல். மற்ற விவரங்களுக்கு எழுதவும்

| ஊர் | தேதி | நேரம் |
|---|---|---|
| தாராபுரம் | 1 | காலை 8-30 to 9-30 |
| பழனி | 1 | காலை 10-30 to 11-30 |
| உடுமலைப்பேட்டை | 1 | மாலை 3 to 4 |
| பொள்ளாச்சி | 1 | மாலை 5 to 6 |
| பாலக்காடு | 2 | காலை 9 to 11 |
| ,, | 2 | மாலை 3 to 5 |
| கோயமுத்தூர் | 3 | காலை 9 to 11 |
| ,, | 3 | மாலை 2 to 4 |
| மேட்டுப்பாளையம் | 3 | மாலை 5 to 6 |
| சத்தியமங்கலம் | 4 | காலை 8 to 9 |
| கோபி | 4 | காலை 10 to 11 |
| பவானி | 4 | மாலை 2 to 3 |
| மேட்டூர் அணை | 4 | மாலை 4-30 to 5-30 |
| ஈரோடு | 5 | காலை 9 to 11 |
| திருப்பூர் | 5 | மாலை 4 to 5-30 |
| திருச்சி | 6 | காலை 11 to மாலை 6 |
| தஞ்சாவூர் | 7 | காலை 7 to 9 |
| கும்பகோணம் | 7,17,27 | காலை 10 to மாலை 5 |
| சீர்காழி | 8 | காலை 7 to 8-30 |
| மாயூரம் | 8 | காலை 9 to 11 |
| நன்னிலம் | 8 | மாலை 2 to 3 |
| நாகப்பட்டினம் | 8 | மாலை 5 to 6-30 |
| திருவாரூர் | 9 | காலை 7-30 to 9-30 |
| விஜயபுரம் | 9 | காலை 10 to 11 |
| திருத்துறைப்பூண்டி | 9 | மாலை 2 to 3-30 |
| பட்டுக்கோட்டை | 9 | மாலை 4-30 to 6-30 |
| புதுக்கோட்டை | 10 | காலை 8 to 1) |
| பொன்னமராவதி | 10 | காலை 11-30 to 12-30 |
| தேவகோட்டை | 10 | மாலை 2-30 to 3-30 |
| காரைக்குடி | 10 | மாலை 4-30 to 6 |
| பரமக்குடி | 11 | காலை 8 to 10 |
| ராமனாதபுரம் | 11 | மாலை 3-30 to 4-30 |
| சிவகங்கை | 11 | காலை 8-30 to 10 |
| மதுரை | 11 | காலை 11 to 12-30 |
| ,, | 11 | மாலை 3 to 6 |
| கோவில்பட்டி | 12 | காலை 8 to 9 |

| ஊர் | தேதி | நேரம் |
|---|---|---|
| திருநெல்வேலி ஜங். | 12 | மாலை 3 to 5 |
| திருநெல்வேலிடவுன் | 12 | மாலை 5 to 6 |
| அம்பாசமுத்திரம் | 13 | காலை 8 to 9-30 |
| தென்காசி | 13 | மாலை 3 to 5 |
| ராஜபாளையம் | 14 | காலை 9 to 10 |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை 10-30 to 11-30 |
| பெரியகுளம் | 14 | மாலை 3 to 4-30 |
| திண்டுக்கல் | 15 | காலை 8 to 9-30 |
| நாமக்கல் | 15 | மாலை 3 to 4-30 |
| ராசிபுரம் | 15 | மாலை 5-30 to 6-30 |
| சேலம் | 16 | காலை 9 to 11 |
| ,, | 16 | மாலை 3 to 5 |
| சேலம்: செவ்வாய்ப் பேட்டை | 16 | மாலை 1-30 to 2-30 |
| தருமபுரி | 17 | காலை 9 to 10-30 |
| கிருஷ்ணகிரி | 17 | மாலை 3-30 to 5 |
| திருப்பத்தூர் (N.A.) | 18 | காலை 8-30 to 10 |
| குடியாத்தம் (N.A.) | 18 | மாலை 2 to 3-30 |
| சித்தூர் (ஆந்திரா) | 18 | மாலை 5 to 6-30 |
| வேலூர் (N.A.) | 19 | காலை 9 to 11 |
| பெரிய காஞ்சிபுரம் | 19 | மாலை 3 to 5 |
| சென்னை | 20 | காலை 9 to 11 |
| ,, | 20 | மாலை 3 to 5 |
| செங்கற்பட்டு | 21 | காலை 9 to 10-30 |
| திண்டிவனம் | 21 | மாலை 2-30 to 4 |
| விழுப்புரம் | 21 | மாலை 5 to 6 |
| திருவண்ணாமலை | 22 | காலை 8-30 to 10 |
| திருக்கோவிலூர் | 22 | காலை 11 to 12 |
| கடலூர் (N.T.) | 22 | மாலை 4 to 5-30 |
| சிதம்பரம் | 23 | காலை 9 to 10-30 |
| விருத்தாசலம் | 23 | மாலை 3-30 to 5 |
| கள்ளக்குறிச்சி | 24 | காலை 8-30 to 9-30 |
| ஆத்தூர் | 24 | காலை 11 to 12 |
| துறையூர் | 24 | மாலை 3-30 to 5 |
| மல்லேஸ்வரம் பெங்களூர் - 3 | 26 | காலை 9 to 11 |
| | | மாலை 3 to 5 |

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்யசாலை H. O. கரூர்

கிளைகள் :
1. 94, டவுன் ஹைஸ்கூல் ரோடு, கும்பகோணம்
2. 2332, 5th கிராஸ், மல்லேஸ்வரம், பெங்களூர்-3

குறிப்பு: குழந்தைகளுக்குக் கட்டி வராமல் தடுக்கவும், சுக்குவான் இருமலைக் குணப்படுத்துவதற்கும், தொண்டை சதை வளர்ச்சியை (TONSILS) ஆபரேஷன் இல்லாமல் குணப்படுத்துவதற்கும் எங்களிடம் நல்ல மருந்துகள் கிடைக்கும்.

# வட்ட மேஜை

சென்ற ஐந்து ஆண்டுகளாக ராஜாஜியின் பிறந்த தினத்தை யொட்டிப் பல கட்டுரைகள் கல்கி இதழை அலங்கரித்து வந்திருக்கின்றன. இவற்றிலெல்லாம் 9–12–62 கல்கி இதழில் ராஜாஜியின் எண்பத்தைந்தாவது பிறந்த தினத்தையொட்டி ஸ்ரீ ராஜன் பாபு எழுதிய ''இணையற்ற தலைவர்'' என்ற கட்டுரை இணையற்ற கட்டுரையாகவே ஆகிவிட்டது. ராஜாஜியின் வாழ்க்கை வரலாறு என்றே அதனைக் கூறலாம். உண்மையை உள்ளபடியே எழுதிவிட்டார் ஸ்ரீ ராஜன்பாபு. கட்டுரையின் இறுதிப் பாகங்களைப் படிக்கும் போது கண்களில் நீர் ததும்பி விட்டது. ஆண்டவன் அருள்.

ஸ்ரீ ராஜன் பாபு கூறியது போல் அரசியலிலும் குடும்ப வாழ்விலும் மகிழ்ச்சி யடையாமல் பல தோல்விகளையும் எதிர்ப்புக்களையும் சமாளித்து, குரூரமான ஆஸ்த்மா வியாதிக்கும் ஈடு கொடுத்து, தளராத மனத் திடத்துடனும், கடும் உழைப்புடனும் 1922ல் இருந்தது போலவே இன்றைக்கும் ராஜாஜி பலசாலியாகவே இருக்கிறார். ஒரு யோகியாக இருந்து வருகிறார்.

அத்தகைய இணையற்றவர் இன்னும் எத்தனையோ ஆண்டுகள் வாழ்ந்து நமது தாய் நாட்டுக்குத் தமது ஒப்பற்ற தலைமையைத் தந்து வழிகாட்டப் பிரார்த்திக்கிறேன்.

கோயமுத்தூர் — **வாசுகி கிருஷ்ணமூர்த்தி**
7–12–62

டிசம்பர் 9–ந் தேதி கல்கி இதழ் அழகுற அமைந்திருந்தது. இந்த இதழுக்குத் தனி அழகைக் கொடுக்கும் வண்ணம் அன்பு, அறம், அறிவு, அடக்கம், பண்பு அனைத்திலும் தமக்கு (வேறொருவர்) நிகரில்லாத் தகைமையுடன் விளங்கும் நமது அன்புத் தலைவர் ராஜாஜி அவர்களின் படத்தை அட்டையிலேயே பிரசுரித்து ''மூன்று திருநாட்கள்'' என்ற தலையங்கத்தையும் எழுதியுள்ள தங்களை எங்ஙனம் போற்றுவது? உண்மையிலே ஆத்ம இருளிலும், அஞ்ஞான இருளிலும் மூழ்கிய மக்களை (வல்லரசு உள்பட) விழிப்புறச் செய்யும் வகையில் தமது அறிவு ஒளியால் வழிகாட்டி வரும் தலைவர் ராஜாஜியின் எண்பத்தைந்தாவது பிறந்த தினம் கார்த்திகை தின மகோத்சவத்துடன் சேர்ந்தது மிகவும் பொருத்தமே.

எல்லாம்வல்ல இறைவன் அவருக்கு மேலும் நீண்ட ஆயுளை அருள்வானாக.

மாதுங்கா — **ஆர். ஆராவமுதன்**
7–12–62





ஸ்ரீ காளிதாஸ் அவர்கள் ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் பாராட்டுத் தொகுப்பு ஒன்றை ஆங்கிலத்தில் வெளியிட்டிருந்தார் அல்லவா? இந்த நற்பணியைப் பாராட்டி இம்மாதம் 8ந் தேதி சென்னை தாஸப்பிரகாஷில் ஒரு தேநீர் விருந்து நடைபெற்றது. இதில் தமிழ்நாட்டின் தவப் புதல்வர்களான ராஜாஜி, ஸி. பி. ராமஸ்வாமி அய்யர், டாக்டர் லட்சமணஸ்வாமி முதலியார் மூவரும் கலந்து கொண்டனர். இந்த மூன்று பெரியோரையும் சென்னை லயோலா கல்லூரி பிரின்ஸிபால் ஸிக்யூராவையும் மேலே காண்கிறீர்கள். நிகழ்ச்சியில் கலந்து கொண்ட அமெரிக்கக் கான்ஸல் ஜெனரல் ஸைமன்ஸையும், விருந்தளித்த ஸ்ரீ சூரியநாராயணனையும், பாராட்டுக்குப் பாத்திரமான ஸ்ரீ காளிதாஸையும் கீழே காணலாம்.

# அதிசய உணவுக் கூடை

மக்களை நல்வழிப்படுத்துவதற்காக ஆண்டவனால் அனுப்பப்பட்ட ஏசு பிறந்தாகி விட்டது. மன்னன் ஹெராதின் கொடுமையிலிருந்து குழந்தையைக் காக்க அன்னை மேரியும் அப்பன் ஜோசப்பும் ஏசுவுடன் எகிப்தை நோக்கி ஓடினார்கள். ஆண்டவனின் அருள் பெற்ற அற்புதக் குழந்தை ஏசு வளர்ந்து பெரியவரானார். குழந்தையின் அன்பு முகமும் அருள் பார்வையும் எல்லோரையும் வசீகரித்தன. ஏசுவின் ஒவ்வொரு செயலிலும் தெய்வீகத் தன்மையைக் கண்டார்கள் மக்கள். அவருடைய அருள் வாக்குகளைக் கேட்க மக்கள் வந்து கூடினார்கள். ஏசுநாதர் தீராத நோய்களைத் தீர்த்து வைத்தார். குருடனுக்குப் பார்வையை அளித்தார். ஊமையைப் பேச வைத்தார். எல்லாவற்றுக்கும் மேலாக ஜைரஸின் இறந்த மகளை எழுப்பிக் கொடுத்தார். இத்தகைய செயல்களால் ஏசுவின் புகழ் எங்கும் பரவலாயிற்று. ஈசலைப் போல மக்கள் அவரைக் காண, அவர் உபதேசங்களைக் கேட்க எங்கிருந்தெல்லாமோ வந்து கூடலானார்கள்.

மக்களின் துன்பங்களைத் துடைப்பதற்கென்றே அவதரித்த பிரான், அவர்களின் குறைகளைக் கேட்டு ஆறுதல் சொல்லிச் சொல்லிக் களைத்துப் போனார். கடல் அலையைப் போல மக்கள் வெள்ளம் பெருகிக் கொண்டிருந்தது. அமைதியையும் ஓய்வையும் வேண்டி ஏசு தம் தோழர்களுடன் மக்கள் கூட்டத்திலிருந்து விலகிக் காலிலி கடலைக் கடந்து மறு கரையில் ஒரு குன்றை அடுத்த பாலைவெளிக்குப் போய்ச் சேர்ந்தார் — மக்கள் கூட்டத்தின் அன்புத் தொல்லையிலிருந்து கொஞ்ச நேரமாவது விடுபட்டிருக்கலாம் என்ற நோக்கத்துடன். ஆனால் மக்கள் ஏமாறவில்லை. கொளுத்தும் வெயிலையும் பொருட்படுத்தாமல் எறும்புச்சாரிகளைப் போல அந்தக் குன்றின் நாலா பக்கங்களிலிருந்தும் ஜனங்கள் ஏசுவை நோக்கி வரலானார்கள். படகுகள் ஜனக் கூட்டத்தைக் கொண்டு வந்து கொட்டிக் கொண்டிருந்தன.

தம்மை நோக்கி வரும் மக்கள் கூட்டத்தைப் பார்த்தார் ஏசு. அவர் கண்களில் நீர் வழியலாயிற்று. "மேய்ப்பானில்லாத ஆடுகள், வளமான புல் வெளியைத் தேடி இங்கும் அங்கும் அலைந்து திரிவதைப் போல இவர்கள் என்னை நோக்கி ஓடிவருகிறார்கள்" என்றார். பிறகு அவர்களின் துன்பம் துடைக்கும் காரியத்தை மேற்கொள்ளலானார். நேரம் போய்க் கொண்டிருந்தது. பகல் தணிந்து மாலையாகிக் கொண்டிருந்தது. ஏசுவுக்குக் களைப்பு மேலிட்டது. ஆனால் கூட்டம் கலைந்து போகவில்லை. மனைவி மக்களுடன் ஏசுவைக் காண வந்து கூடியிருந்த அத்தனை பேரும் பட்டினியோடு இருந்தனர். வெகு சிலர் மட்டுமே ஏதோ கொஞ்சம் உணவு கொண்டு வந்திருந்தனர். மக்களின் வாடிய முகத்தைப் பார்த்தார் ஏசு. அவர்களின் காய்ந்த வயிறு அவர் உள்ளத்தைக் கலக்கியது. தன் சீடனை பிலிப்பை நோக்கி, "பசியால் களைத்து வாடும் இவ்வளவு பேருக்கும் நாம் உணவளிக்க முடியுமா?" என்று கேட்டார். சீடர்கள் அவநம்பிக்கையோடு தலையாட்டினார்கள். "இது பாலைவனம். எதையும் வாங்க வீடோ, கடைகளோ இங்கு கிடையாது. ஆகவே இவர்களை அருகில் உள்ள கிராமங்களுக்குச் சென்று உண்ண உணவும் இரவு தங்க வசதியும் பெறச் சொல்லி அனுப்பி வையுங்கள்" என்றார்கள்.

"முடியாது" என்றார் ஏசு உறுதியோடு. "இவர்கள் எல்லோரது பசியையும் தீர்க்க நாம் ஏதாவது செய்துதான் ஆகவேண்டும்."

அப்போது இவர்களின் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டு அருகே நின்றிருந்தான் ஒரு பையன். அவன் கையில் ஒரு கூடை இருந்தது. அதில் பார்லியினால் செய்த ஐந்து ரொட்டிகளும் இரண்டு மீன்களும் இருந்தன. மௌனமாகத் தன் ரொட்டிக் கூடையை ஏசுவின் சீடனை ஆண்ட்ரூவிடம் நீட்டினான் பையன். கூடையில் இருந்ததைப் பார்த்தார் ஆண்ட்ரூ. பையனின் எண்ணத்தைப் புரிந்து கொண்ட



உங்கள் ஆல்பத்துக்கு

உலகிலேயே எந்த ஒரு நாட்டில் அதன் நிலப் பரப்புக்கு அதிகமாக ரயில் பாதை இருக்கிறது என்று தெரியுமா உங்களுக்கு? பெல்ஜியம் நாட்டில்தான். குறுகலான வீதிகளையும் பழமையான வீடுகளையும் கொண்ட நாடு பெல்ஜியம். பெல்ஜியத்தின் தேசிய உடையை அணிந்து கொண்டுள்ள ஒரு பெண்ணையே மேலே காண்கிறீர்கள்.



அவர், புன்முறுவலோடு தலையை ஆட்டினார். 'இந்த ஐந்து ரொட்டித் துண்டுகளைக் கொண்டு இங்கு குழுமியுள்ள ஐயாயிரம் பேர்களின் பசியை எப்படியப்பா போக்க முடியும்?' என்று கேட்பது போல் இருந்தது அண்ட்ரூவின் பார்வை.

அதே சமயம் ஏசுவின் அருள் பார்வை பையனின் மீது விழுந்தது. ''அந்தப் பையன் என்ன கொண்டு வந்திருக்கிறான்?'' என்று அன்பொழுகக் கேட்டார் ஏசு. கூடை அவரிடம் காட்டப்பட்டது. 'இதைக் கொண்டு இத்தனை பேர்களின் பசியை எப்படிப் போக்க முடியும்?' என்று அவநம்பிக்கை தொனிக்கக் கேட்டார்கள் சீடர்கள். ஆனால் கர்த்தரின் முகத்தில் அமைதி நிலவியது. இதழ்களில் புன்னகை மிளிர்ந்தது. துயர் துடைக்கத் துடிக்கும் தமது கரத்தை உயர்த்தினார். ''எல்லாரையும் அமைதியாக உட்காரச் சொல்லுங்கள். எல்லோருக்கும் உணவு அளிக்கப்படும் என்றும் சொல்லுங்கள். அந்தக் கூடையை என்னிடம் தாருங்கள்'' என்றார். வியப்பு வழியும் விழியோடு நிற்கும் தம் சீடர்கள் பன்னிருவரிடமும் அந்த ஐந்து ரொட்டிகளையும் - இரண்டு மீனையும் பங்கு போட்டுக் கொடுத்து அதை அங்குள்ள மக்களுக்கு விநியோகிக்குமாறு கட்டளையிட்டார். சீடர்கள் உணவுக் கூடையோடு பசியால் வாடும் மக்களை நோக்கிப் போனார்கள். அற்புதம் நிகழ்ந்தது. கூடையிலிருந்து எடுத்துக் கொடுக்கக் கொடுக்க உணவு குறையவே இல்லை. வளர்ந்து கொண்டேயிருந்தது. ஐயாயிரம் மக்களுக்கும் வயிறு நிரம்ப உண்ணக் கொடுக்கப்பட்டது. அதன் பிறகும் கூட உணவுக் கூடை காலியாகவில்லை. மக்கள் உண்டபோது கீழே சிதறிய ரொட்டித் துண்டுகளை யெல்லாம் ஒன்று திரட்டுமாறு பணித்தார் ஏசு. 'சிறிது உணவும் வீணாகக் கூடாது' என்பது அவர் கட்டளை. அப்படிச் சேகரித்த போது அது பன்னிரண்டு கூடை நிரம்ப இருந்தது. பசி தீர்ந்த மக்களின் பளிச்சிட்ட முகங்களைக் கண்ட ஏசுவின் இதயமும் மகிழ்ச்சியால் மலர்ந்தது. பையனிடம் கூடையைப் புன்முறுவலோடு திருப்பிக் கொடுத்தார். அந்தச் சிறுவனின் வியப்புக்கு எல்லையே இல்லை. தன் உணவுக் கூடையை ஏற்றுக் கொண்டு அதனால் ஐயாயிரம் பேர்களின் பசியைத் துடைத்த ஏசுவின் மகத்தான செயலை எண்ணி எண்ணி வியந்தவாறு இருள் கவியும் நேரத்தில் தன் வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தான் அந்தப் பையன்.



### அதிசயம் ஆனால் உண்மை !

அக்பர் தம் ஆட்சி காலத்தில் ஒரு புதிய தலைநகரை நிர்மாணித்தார். அதற்குப் பதேபூர் சிக்ரி என்று பெயர். அற்புதமான கட்டிடங்களுடன் உருவாக்கப்பட்ட அந்த நகரம் தண்ணீர் வசதி இல்லாமையால் அக்பரின் காலத்திலேயே பாழடைந்தது. அங்கு ஷெய்க் ஸலீம் சிஸ்தி என்பவரின் மசூதி ஒன்று இருக்கிறது. அதன் கதவில் குதிரை லாடங்களாகப் பதிக்கப்பட்டுள்ளது. தங்கள் குதிரைகள் ஏதாவது நோய் வாய்ப்பட்டால் அதன் கால் லாடத்தைக் கொண்டு வந்து இந்த மசூதியின் கதவில் அடித்துப் பதித்து விட்டுப் போவார்களாம். குதிரையின் நோயும் குணமாகுமாம்.




### கணித மேதைக்குக் கௌரவம்

உலகத்துக் கணக்கியல் அறிஞர்கள் எல்லாம் வியந்து பாராட்டும் மேதையைப் பெற்ற பெருமை நம் தமிழ்நாட்டுக்கு உண்டு. கணித மேதை ராமானுஜம் இன்று இருந்திருந்தால் நமது ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் அவர்களைவிட ஒன்பது மாதங்கள் பெரியவராக இருப்பார். விஞ்ஞான மேதை ஸி.வி. ராமனைப் போன்று அவரையும் கணித இயலுக்காகப் பாரத அரசாங்கம் கௌரவித்திருக்கும். அவரும் உலகத்துக்குக் கணிதத்தில் எத்தனையோ புதிய உண்மைகளை வெளியிட்டிருப்பார். எண்களோடு தோழமை கொண்டு கணக்கில் பல அற்புதமான கண்டு பிடிப்புக்களைச் செய்து தமது முப்பத்திமூன்றாவது வயதிலேயே அமரராகிவிட்ட கணித மேதையின் எழுபத்திஞந்தாவது பிறந்தநினத்தை யொட்டிப் பாரத அரசாங்கம் தபால் தலையில் அவரது உருவப்படத்தை வெளியிட்டிருக்கிறது.

# பாரதி பிறந்தார்




வீரக கனல் எழுப்பிய பாட்டுக்கொரு புலவர் பாரதியாரின் எண்பத்தோராவது பிறந்த தினம் சென்னை ராஜாஜி ஹாலில் டிசம்பர் 9, 10, 11 தேதிகளில் அதிவிமரிசையாக நடைபெற்றது. கவியரசருக்கு அஞ்சலி செலுத்தும் இவ்விழாவில் மைசூர், ஆந்திர, சென்னை முதன் மந்திரிகள் கலந்து கொண்டனர். தமிழ்ப் பேரறிஞர்களும், பிறமொழி அறிஞர்களும் கவியின் பெருமையை எடுத்துரைத்தனர். பல கவிஞர்களின் கவியரங்கமும் இவ்விழாவில் இடம்பெற்றிருந்தது. 'மன்னும் இமயமலை எங்கள் மலையே' என்று மார்தட்டிக் கூறிய கவிஞரின் தீர்க்க தரிசன வாக்கைப் பலர் எடுத்துக் கூறி, அன்னியன் சீனனை நம் மண்ணிலிருந்து விரட்டப் போர் முரசம் கொட்டினர். இவ்விழாவை யொட்டி நடைபெற்ற பாரதியார் கண்காட்சியைச் சென்னை முதன் மந்திரி திரு காமராஜ் திறந்துவைத்தார்.

1. கவிச் சக்கரவர்த்தி பாரதியார் விழாவிலே பரிசுகள் வழங்கிய ஆந்திர முதன் மந்திரி திரு சஞ்சீவ ரெட்டி அவர்கள் உரையாற்றுகிறார். 2. டாக்டர் சி. பி. ராமசாமி அய்யர் அவர்கள் முதல் நாள் பாரதியார் விழாவுக்குத் தலைமை வகிக்க மைசூர் முதன் மந்திரி திரு நிஜலிங்கப்பா விழாவைத் தொடங்கிவைத்துப் பேசுகிறார். 3. தெருவெல்லாம் பாரதியாரின் வீர வாசகங்களை எட்டுத் திக்கும் எட்ட முழங்கிக்கொண்டு நீண்ட ஊர்வலம் சென்னைக் கடற்கரையை நோக்கிச் செல்கிறது.

# நந்தவனம்

## சோழு



### 52. இளைஞன் செல்கிறான்!

சீனிவாச மண்டபத்து இளைஞன் தனது வரலாற்றை மேலே மேலே தொடர்ந்து சொல்லிக் கொண்டு போனவன், இப்போது புன்முறுவலோடு என்னையும் லாலா ராம்சிங்கையும் பார்த்துச் சொன்னான்:

''நண்பர்களே! இதுவரை என் பெற்றோர்களைப் பற்றியும், உற்றார் உறவினர்களைப் பற்றியும் சொன்னேன். இப்போது என் கதையையும் சொல்லிவிட்டேன். இதற்கு மேல் எனது காதல் அனுபவங்களைச் சொல்ல வெட்கமாக இருக்கிறது!''

மண்டபத்திலே சிறிது நேரம் மௌனம் நிலவியது. இளைஞனுடைய வாழ்க்கை அனுபவங்களை லாலாவும் நானும் மௌனமாக மனத்துக்குள் விமரிசனம் செய்து கொண்டோம். லாலா கேட்டார்:

''தம்பி! இப்போது புரிகிறது இந்த யமகிங்கரர்கள் இருவரும் ஏன் உங்களை இப்படி வேவு பார்க்கிறார்கள் என்று! வல்லாளவேலரும் வக்கீல் குமாஸ்தா பஞ்சவர்ணமும் உங்களுடைய இலட்சியங்களுக்கு இடையூறு செய்ய முனைந்து நிற்கிறார்கள் என்றே அஞ்சுகிறேன். ஆனால் ஒரு சிறு சந்தேகம். நீங்கள் வக்கீல் செந்தில் நாயகம் அவர்களை இன்னும் சந்திக்கவில்லையோ?''

லாலா இவ்வாறு கேட்டதும், சிவகாமி நாதன் என்ற அந்த மண்டபத்து இளைஞனின் முகத்தில் ஒரு குழப்பமான கவலை படர்ந்தது.



''ஐயா! இரண்டு வாரங்களுக்கு முன்பே நான் திவான்பகதூருக்குக் கடிதம் எழுதிவிட்டேன். அவரும் என்னை இங்கே வந்து சேரும்படி பதில் எழுதி விட்டார். ஆனால் நான் இங்கு வந்ததிலிருந்து அவரைச் சந்திக்க முடியாமற் போய்விட்டது. அதுதான் என்னுடைய குழப்பத்துக்கும் கவலைக்கும் காரணம்!''

''ஏன்? நீங்கள் ஏன் வக்கீலைச் சந்திக்கவில்லை?''

''நான் இந்த ஊருக்கு வந்த அன்றைக்கே வக்கீல் வீட்டுக்குப் போனேன். ஆனால் அவர் ஊரில் இல்லை. விசாரித்ததில் திடீரென்று அவர் வெளியூருக்குப் போயிருப்பதாகவும் திரும்பி வரப் பத்து நாட்கள் ஆகும் என்றும் தெரிகிறது. அவரைச் சந்திப்பதற்கு முன்பு நான் சிங்கம்புத்தூருக்குப் போவதோ, அல்லது மாலதியைச் சந்திக்க முயற்சி செய்வதோ தவறு என்று தயங்குகிறேன். இந்த நிலையில் ஒவ்வொரு நாளும் வண்ணார்பேட்டைக்குச் சென்று விசாரிக்கிறேன். ஏமாற்றத்தோடு திரும்புகிறேன். இங்கே விடுதியில் தனியாகத் தங்கியிருக்கிறேன். ஏகாந்தத்தில் ஏதேதோ துயர நினைவுகள் எழுந்து மனசைக் கவலைப்படுத்து

கின்றனை. சாயந்திரம் இப்படி வந்து இந்த மண்டபத்தில் உட்கார்ந்து கொஞ்சம் பொழுதைக் கழிக்கிறேன். உள்ளத்தில் நிம்மதி இல்லை. திவான்பகதூர் என்னை இங்கே வரும்படியாகச் சொல்லி விட்டு இப்படித் திடீரென்று வெளியூர் சென்றது ஏதேதோ குழப்பங்களைத் தருகிறது. அங்கே கல்கத்தாவில் அம்மா மிகவும் கவலைப்பட்டுக் கொண்டு இருப்பார்கள். சிங்கம்புத்தூரிலோ மாலதி, என்னிட மிருந்து ஒரு தகவலும் இல்லையே என்று, ஒவ்வொரு விநாடியும் கலவரம் அடைந்து கொண்டிருப்பாள்! இதற்கு மத்தியில் இங்கே இரண்டு பொல்லாத சத்துருக்கள் என்னை வளைய வந்து கொண்டிருக்கிறார்கள். என்ன செய்வது என்று ஒன்றுமே புரியவில்லை. ஆனால் இத்தனை துன்பங்களுக்கு மத்தியிலும் உங்கள் இருவரையும் விதி இங்கே கொண்டு வந்து சேர்த்திருக்கிறது. இருட்டுக்கு மத்தியில் ஒளி உண்டாகும் என்று சொல்வார்களே, அப்படிப்பட்ட ஒரு பிரகாசம்தான் உங்களுடைய சந்திப்பு!'' என்றான் சிவகாமிநாதன்.

லாலா சொன்னார்: ''தம்பி! உங்களுடைய வரலாறு முழுவதையும் கேட்ட பிறகு. இப்போது எனக்கு ஒன்று தோன்றுகிறது. நீங்கள் கவலைப்படுவதற்கு அவசியமே இல்லை என்று பரிபூரணமாக நம்புகிறேன். உங்களை இங்கே வரச் சொல்லிக் கடிதம் எழுதியபிறகு வக்கீலுடைய திட்டத்தில் ஒரு சிறு



மாறுதல் ஏற்பட்டிருக்கும். விபரீத மான மாறுதல் இல்லை. நல்ல வித மான மாறுதல். அதாவது சித்தி ரானந்தர் திடீரென்று இந்த ஊருக்கு வந்திருப்பார். இருவரும் சந்தித்துப் பேசியிருப்பார்கள். இதன் பலனாக ஏதோ ஒரு திட்டம் உருவாகியிருக் கிறது. இந்த விவரம் எல்லாம் வல் லாளவேலருக்கோ அல்லது பஞ்சவர் ணத்துக்கோ தெரிந்திருக்க நியாய மில்லை. இவர்கள் ஏதோ பெரிதாக உளவு பார்த்துக் குற்றவாளியைக் கண்டுபிடிப்பதாக எண்ணி, இங்கே வலைய வருகிறார்கள்! வந்து விட்டுப் போகட்டுமே! வக்கீல் திரும்பி வந்த தும் எல்லா மேகங்களும் கலைந்து விடும். வானம் தெளிந்து விடும். இவர்களால் உங்களுக்கு இந்த ஊரில் எவ்வித இடையூறும் நேராதபடி நான் பார்த்துக் கொள்கிறேன். கவலையே வேண்டாம்!'' என்றார் லாலா.

''அப்படியா?'' என்றான் இளைஞன்.

''நீங்கள் சந்திரவிலாஸ் விடுதியில் தானே தங்கியிருக்கிறீர்கள்?''

''ஆமாம். சந்திர விலாஸ் மாடியில் தான் இருக்கிறேன்!''

''நல்லதாய்ப் போயிற்று. எங்கள் மிட்டாய்க் கடைக்கு எதிரிலேதான் இருக்கிறீர்கள் நீங்கள். உங்களுக்கு நேரம் போகாவிட்டால் எங்கள் கடை யிலே வந்து அங்கே போட்டிருக்கும் பெஞ்சிலே உட்கார்ந்து கொள்ளுங்கள். இரண்டொரு நாளில் வக்கீல் திரும்பி வந்து விடுவார் என்றே நினைக்கிறேன். அவசியமானால் வக்கீல் குமாஸ்தாவை தான் சந்திக்கிறேன். நீங்கள் எனக்கு மிகவும் வேண்டியவர் என்ற ஒரு அபிப்பிராயம் இந்த ஊரில் நாலு பேருக்குத் தெரிந்தால் நல்லதுதான். இந்த மீனாட்சிபுரம் ஊரில் ஒரு பெரிய சிலம்பப் பள்ளிக்கூடம் இருக்கிறது. அதன் ஆசான் எனது நண்பர். தேவைப்படுமானால் அவரையும் உங் களுக்கு அறிமுகம் செய்து வைக்கி றேன். அவருடைய நட்பு இருந்தால், பஞ்சவர்ணமோ வல்லாளவேலரோ, அல்லது வேறு எந்தச் சண்டியரோ உங்கள் பக்கத்தில் வருவதற்கு யோசனை செய்வார்கள்!''

''ராம் சிங்! தம்பியை இன்று தனி யாக அனுப்புவதைவிட நாமே இவரை விடுதியிலே கொண்டு விட்டுவிடு வோமே! எத்தனையோ இரகசியமாகக் காதும் காதும் வைத்தாற் போல் இந்த ஊருக்கு வந்திருக்கிறார் இவர்! அப்படியிருந்தும் இவர் இங்கே வந் திருப்பதைக் கண்டுபிடித்து இவரை வேவு பார்க்க ஆரம்பித்து விட்டார் களே! அதை எண்ணும் போதுதான் எனக்குக் கொஞ்சம் கவலையாக இருக் கிறது!'' என்றேன்.

இதன் பேரில் இளைஞனோடு நானும் லாலாவும் துணையாகப் புறப்பட் டோம். பேசிக் கொண்டே மூவரும் நடந்தோம்.

''நண்பர்களே! சென்னைக் கல்லூரி யில் என்னையும் மாலதியையும் பற் றிய வதந்தி மெதுவாகப் பரவி வந்து சிங்கம்புத்தூர் வரை எட்டியிருக்க வேண்டும் என்று தெரிகிறது! இல்லை யென்றால் இந்த மனிதர்களுக்கு நான் இங்கே வந்திருப்பது எப்படித் தெரி யும். 'கல்லூரி மாணவியை இங்கே சந்தித்தீர்களா?' என்று உங்களைக் கேட்டதிலிருந்து மாலதியும் சிங்கம் புத்தூரில் இல்லையோ என்று சந்தேகப் படுகிறேன்!'' என்றான் சிவகாமிநாதன்.

''அதிகமாக யோசனை செய்யா தீர்கள் தம்பி! சிங்கம்புத்தூரிலிருந்து அடிக்கடி காரில் இங்கே அந்தக் குடும் பத்தார் வந்து போவார்கள். கல்லூரி யிலே படிக்கும் ஒரு மாணவி, அதி லும் பழைய ஜமீன் குடும்பத்துப் பெண் ஒவ்வொரு தடவையும் வெளியே புறப் படும்போதும் எங்கே போகிறாள் என் பதைச் சொல்லிக் கொண்டா புறப்படு வாள்? அவளிடம் போய் அந்த விவ ரத்தை யெல்லாம் கேட்பதற்கு யாரால் முடியும்? காரிலே அவள் புறப்படுவ தைப் பார்த்திருப்பார் வல்லாளவேலர். கார் திருநெல்வேலிக்கு வந்திருக்கும். வக்கீலின் வீட்டுக்கே வந்திருக்கலாம். இதை யெல்லாம் பார்த்து விட்டு வக்கீல் குமாஸ்தாவும் வல்லாளவேல ரும் ஏதேதோ ஆராய்ச்சிகள் செய் கிறார்கள். இதை யெல்லாம் பற்றி நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? போக்கிரிகள் யாரும் உங்கள் வழிக்கு வராதபடி நானேயே ஆசானிடம் உங் களைப் பற்றிச் சொல்லி வைக்கிறேன். வக்கீல் வருகிறவரை இப்படி முன் ஜாக்கிரதையாக இருந்து கொள்வது நல்லது. அவர் வந்து விட்டால் பிறகு கவலையே இல்லை!'' என்றார் ராம்சிங்.

வக்கீல் செந்தில்நாயகமும் சித்தி ரானந்தரும் நிச்சயம் சந்தித்துப் பேசி யிருப்பார்கள் என்று எனக்குத் தோன் றிற்று. இளைஞன் திருநெல்வேலிக்கு வருவதாகக் கடிதம் எழுதியதுமே, திவான்பகதூர் செந்தில்நாயகம் அவர்கள் சித்திரானந்தரை இங்கே வரவழைத்திருப்பார் என்று எண்ணி னேன். இந்தச் சந்திப்பின் பயனாகத் தான் ஏதோ ஒரு திட்டம் முடிவாகி யிருக்க வேண்டும் என்று தோன்றிற்று எனக்கு. யோசித்துக் கொண்டே நடந்த போது ஒரு புதிய எண்ணம் மனத்திலே எழுந்தது. ஒருவேளை சித்திரானந்தரும் வக்கீல் செந்தில்நாயகமும் கல்கத்தா வுக்குப் போயிருக்கக் கூடுமோ?

''ராம் சிங்!'' என்றேன் பதற்றத் தோடு. திரும்பிப் பார்த்தார் லாலா.

# அதிகரித்த பால்!
# அதிகரித்த வனஸ்பதி!

எல்லாச் சத்துக்களும் உரிய அளவில் பெறுவதற்கு ஒவ்வொரு நபரும், மற்ற உணவைத் தவிர, தினசரி குறைந்த பட்சம் 280 கிராம் பால் அருந்த வேண்டுமென்று உணவு ஆராய்ச்சி நிபுணர்கள் கருதுகிறார்கள். புரதப் பொருள்கள், தாதுப் பொருள்கள், விட்டமின்கள் மற்றும் கொழுப்புச் சத்துக்கள் மிகுந்துள்ள பால் ஒரு பரிபூர்ண உணவாகும். சைவ உணவு சாப்பிடுபவர்களுக்கு ஜீவ சம்பந்தமான, அவசியமான, புரதப் பொருள்கள் பாலிலிருந்து மட்டுமே கிடைத்தாக வேண்டும். துரதிர்ஷ்டவசமாக; நம் நாட்டில், அருந்துவதற்கும் பாலிலிருந்து உண்டாக்கப்படும் பலவித பொருள்களைத் தயாரிப்பதற்கும் கிடைக்கக் கூடிய மொத்த பாலின் அளவு, தலைக்கு ஒரு நாளைக்கு 140 கிராம் மட்டுமே. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவில் கூட கிட்டத்தட்ட 145 கிராம் பால் மட்டுமே கிடைக்கக்கூடும்.

போக்கு வரவு வசதிகள் பெருகுவதன் மூலமும் நல்ல நூதன பால் பண்ணைகளை அதிகமாக நிறுவுவதின் மூலமும் அருந்துவதற்குப் பால் இன்னும் கூடுதலாகக் கிடைக்கும். இது பொது மக்களுக்கு மட்டுமல்லாமல், பால்காரர்களுக்கும் நல்ல நிலையாகும். ஏனெனில், பாலிலிருந்து




தயாராகும் பொருள்களை விற்பதை விட பாலை விற்பனை செய்வதே பால்காரர்களுக்கு அதிக லாபகரமானது.

ஆனால், பால் பாலாகவே அதிகமாக அருந்தப்பட்டால் நெய்யின் உற்பத்தி குறைந்துவிடும். உலகத்தின் முற்போக்கு நாடுகளிலுள்ளதைப் போலவே, நம் நாட்டிலும், நெய்யைப் போன்ற விழுதான, கொழுப்புச் சத்தின் பெருகிவரும் தேவையை நாளடைவில் வனஸ்பதி பூர்த்தி செய்யும். பால் பண்ணைகள் மிக நூதன முறையில் அமைந்துள்ள, வெண்ணெய் ஏராளமாகக் கிடைக்கும் டென்மார்க், ஹாலந்து போன்ற நாடுகளில் கூட வனஸ்பதி போன்ற விழுதான தாவரக் கொழுப்பையே முக்கியமாக உபயோகிக்கிறார்கள். விட்டமின்கள் சேர்ந்த வனஸ்பதி பரிசுத்தமான வெண்ணெய்க்கும் நெய்க்கும் சரிசமமாக போஷாக்கு அளிக்க வல்லது. மேலும், எளிதில் கிடைக்கும் தாவர எண்ணெய்களிலிருந்து தயாரிக்கப்படுவதால் வனஸ்பதி உபயோகிக்க மிகச் சிக்கனமானது.

**வனஸ்பதி மற்றும்
வனஸ்பதி போன்ற
கொழுப்புச் சத்துக்கள்
உலகமெங்கும்
உபயோகிக்கப்படுகின்றன**

இந்த விவரங்கட்கு கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்:-

தி வனஸ்பதி மான்யுபாக்சரர்ஸ்
அஸோஸியேஷன் ஆப் இந்தியா
இந்தியா ஹவுஸ்,
போர்ட் ஸ்ட்ரீட், பம்பாய் 1

JWT-VMA-3904

"ஒரு வாரம், பத்து நாள் இருக்கும். நான் உங்கள் மிட்டாய்க் கடையின் பெஞ்சில் உட்கார்ந்து கொண்டிருந்த போது நீண்ட அங்கி அணிந்த சாமி யார் ஒருவர் பழக் கூடைகளோடு வந்து ஹல்வா வாங்கினரே, ஞாபகம் இருக்கிறதா உங்களுக்கு?"

"சாமியாரா? சரியாக ஞாபகம் இல்லையே!"

"பத்து ரூபாய் நோட்டைக் கொடுத்தார். பாக்கிச் சில்லறையைக் கூட வாங்கிக் கொள்ளாமல் ஹல்வாப் பொட்டலத்தோடு புறப்பட்டு விட்டார். பிறகு மறுபடியும் அவரைக் கூப்பிட்டு—"

"ஓ! ஞாபகம் வருகிறது. ரயிலுக்கு அவசரம் என்றரே. இவருக்காக யாரோ ஸ்டேஷனிலே வந்து காத்திருப்பார்கள் என்றும் சொன்னரே! பாக்கிச் சில்லறை வாங்க மறந்து போனதற்கு இந்த அவசரந்தான் காரணம் என்று சொல்லிக் கொண்டே பிறகு ஓட்டமும் நடையுமாக ரயிலடிக்குச் சென்றார். இப்போது ஞாபகம் வருகிறது!"

"ஒருவேளை அவர்தான் சித்திரானந்தரோ? சாயந்திரம் அல்லவா வந்தார். வடக்கே புறப்படுகிற வண்டியைப் பிடித்திருப்பாரோ? ஒருவேளை திவான்பகதூர் செந்தில்நாயகம் இவருக்காக ஸ்டேஷனில் காத்துக் கொண்டிருந்திருப்பாரோ? கல்கத்தாவிலே கலியாணப் பேச்சுப் பேசுவதற்காக இருவரும் சென்றிருப்பார்களோ? அதனால்தான் பழக் கூடையும் மிட்டாய்ப் பொட்டலமுமாக இனிப்போடு சென்றிருப்பார்களோ?"

இதைக் கேட்டதும் இளைஞன் இலேசாகச் சிரித்தான்.

"நண்பர்களே! என்னிடமும் எனது எதிர்கால வாழ்க்கையிலும் நீங்கள் அன்பு காட்ட ஆரம்பித்து விட்டீர்கள். அதனால்தான் இனிப்பான எண்ணங்கள் உங்கள் மனதில் எழுகின்றன...!"

லாலா சொன்னர்:

"தம்பி! எது எப்படியானாலும் இனிக் கவலையில்லை. வக்கீலிடம் உங்களைச் சேர்க்கும் வரை நீங்கள் எங்களுடைய பாதுகாவலில் இருங்கள்! இனிமேல் இந்தச் சீனிவாச மண்டபத்துக்கு நீங்கள் தனியாக வரக் கூடாது. நாங்கள் இருவரும் வரும் போது உங்களையும் எங்களோடு அழைத்துக் கொண்டு வருவோம். விடுதியில் உங்களுக்குத் துணையாக இருப்பதற்குச் சரியான ஆள் ஒருவரை அமர்த்திவிடு



பாகவதர்: இவ்வளவு வருடம் கழிந்து என்னை எதற்குக் கச்சேரிக்குக் கூப்பிடறு?

மனைவி: சபாவில் ராமாயணம் வைத்துக் கேட்டானாம். கும்பகர்ணைப் படலம் வந்தவுடனே உங்க ஞாபகம் வந்ததாம்! உடனே புறப்பட்டு வந்தார்களாம்."

கிறோம். இன்றிரவு உங்களை விடுதியிலே கொண்டு சேர்த்ததும், முதலாவது வேலையாக நாங்கள் சிலம்ப ஆசானைத்தான் பார்க்கப் போகிறோம். வல்லாளவேலரும் பஞ்சவர்ணமும் இனிமேல் அந்த மண்டபத்துப் பக்கமே தலைகாட்டக் கூடாது. அதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்து விடவேண்டும். ஏனென்றால் இந்தச் சித்திர மடவின் கதையைக் கேட்ட பிறகு வல்லாளவேலர் எத்தனை பயங்கரமானவர் என்பது இன்னும் பல மடங்கு தெளிவாகப் புரிகிறது! உங்களை அவர் பின் தொடரும்படி விடவே கூடாது. இது விஷயத்தில் மெத்தனமாக இருந்து விடாமல், இன்றிரவே ஒரு சரியான ஏற்பாட்டைச் செய்துவிட வேண்டும். உங்கள் பேச்சைக் கேட்ட பிறகு உங்களை ஒரு புதிய நண்பர் என்றே எண்ண முடியவில்லை எங்களால். ஏதோ பல ஆண்டுகள் உங்களோடு பழகியது போன்ற ஒரு பிரமையே உண்டாகிறது. செண்பகநாயகி கோவிலின் சித்திரங்கள் இப்படி ஒரு சோகமான முடிவை அடைந்ததற்காக நாங்கள் உண்மையிலேயே மிகவும் வருந்துகிறோம். இனி அந்தக் கோவிலின் சுவர் ஓவியங்கள் நல்ல முறையிலே, எல்லாருடைய ஒத்துழைப்போடும் மீண்டும் புதுப்பிக்கப்பட வேண்டும் என்று மனப்பூர்வமாக நாங்கள் ஆசைப்படுகிறோம். ஜமீந்தார் அனவரதபுவனபதி தமது வாழ்வின் கடைசிக் காலத்தில் ஒரு பெரிய மனக் குறையோடுதான் இந்த உலகிலிருந்து மறைந்திருக்கிறார். வில்வநாதனுடைய இலட்சியமும் ஒரு நிறைவேருத கனவாகவே முடிந்து விட்டிருக்கிறது. உங்களுடைய பாட்டனு



"வித்வான் தேவகானமாகப் பாடுறாரே!"

"அவர் அகர சாதகம் பண்ணினவர் இல்லையா!"

ரான சிவகாமிநாத ஓவியருடைய மனத்தின் ஆசைக் கனவுகளைப் பற்றியோ சொல்ல வேண்டியதே இல்லை. மறைந்து சென்ற இந்த மூன்று உத்தமர்களுடைய ஆன்மாவும் அந்தச் செண்பக நாயகி கோவிலையே சுற்றிச் சுற்றி வலம் வந்து கொண்டிருக்கின்றன என்றே நான் நினைக்கிறேன். ஜமீந்தார் அனவரதபுவனபதி வில்வநாதனை முதன் முதலாகச் சிங்கம் புத்தூருக்கு அழைத்து வந்த போது, ஓவிய இலட்சியங்களோடு அவருடைய உள் மனத்திலே இன்னொரு பெரிய ஆசையும் மலர்ந்திருக்கிறது. அந்த ஆசையின் காரணமாகத்தான் தமது மகள் செல்வி வில்வநாதனிடம் சித்திரம் பயில்வதையும், அந்த உறவு வளர்வதையும் அவர் ஊக்கப்படுத்தி வந்தார். ஆனால் எதிர்பாராதவிதமாக எல்லா மனக்கோட்டைகளும் பாவம், தகர்ந்து போய் விட்டன. ஜமீன் குடும்பத்துக்கும் உங்கள் குடும்பத்துக்கும், உங்கள் தகப்பனார் காலத்திலேயே ஏற்பட்டிருக்க வேண்டிய அந்த உறவு, அந்தச் சம்பந்தம், அவர்களுடைய சந்ததிகளின் காலத்திலாவது இப்போது ஏற்பட வேண்டும். அப்படியானால்தான் அந்தப் பெரிய உள்ளங்களுக்கு ஒரு நிம்மதி உண்டாகும். மறைந்த உயிர்களுக்கு ஒரு சாந்தி ஏற்படும். அருவமாக நின்று அந்தப் பெரியவர்கள் உங்களுடைய வாழ்வை இயக்கி வருகிறார்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது. அப்படியில்லை என்றால், ஒரு பெண்ணைப் போல நீங்கள் இன்றைக்கும் நாட்டியம் ஆடிக் கொண்டு தான் கல்கத்தாவிலே காலம் கழித்திருப்பீர்கள்! சித்திர இறகைக் கையில் பிடித்திருக்க மாட்டீர்கள்! உங்கள் வாழ்க்கையில் சித்திரானந்தரின் சந்திப்பு ஏற்பட்டதே ஒரு வகையான ஆன்ம இயக்கம் என்றுதான் எனக்குப் படுகிறது! அந்தச் சந்திப்பின் பயனாகத்தானே உங்களுடைய அம்மையின் மனம் மாறியது. அதன் பயனாகத்தானே உங்களுடைய சித்திர ஆசைகளுக்கு ஒரு போக்குக் கொடுத்தார் உங்கள் அன்னை! அதன் பிறகு மீண்டும் அந்தச் சித்திரானந்தருடைய கடிதம் வந்த பிறகுதானே, நீங்கள் பனைமலைக்குப் புறப்பட்டுவர அனுமதி கிடைத்தது! இதை யெல்லாம் எண்ணிப் பார்க்கும் போது, நம்முடைய முயற்சிகளுக்கு அப்பால் எத்தனையோ ஆன்ம இலட்சியங்கள் நம்மைச் சூழ்ந்து நின்று, நமது வாழ்க்கை நிகழ்ச்சிகளை இயக்கி வருகின்றன என்பது நன்கு புலனாகிறது! ஆகையால் மனம் தளர்வதற்கோ அளவுக்கு மீறி அச்சம் கொள்வதற்கோ அவசியம் இல்லை. முன்ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதற்காக ஓரளவு எச்சரிக்கை செய்தேன். மற்றப்படி நீங்கள் தைரியமாக இருங்கள். விடுதியிலே சிறையிருப்பது போல் இருக்க வேண்டிய அவசியமோ இல்லை!" என்றார் இளைஞரிடம் லாலா!

'சந்திர விலாஸ்' விடுதிக்குள்ளே நாங்கள் மூவரும் நுழைந்ததும் 'ராம் ராம்' என்று சொல்லி லாலாவை வரவேற்றார் விடுதியாளர். 'ராம் ராம்' என்று சொல்லிக் கொண்டு உள்ளே செல்லும் போதே விடுதியாளர் லாலாவைப் பார்த்துக் கேட்டார், "ஓ. இந்தக் கல்கத்தா இளைஞர் உங்களுக்கு நண்பரா?" என்று.

"ஆமாம். ஏதாவது அவருக்குச் செய்தி இருக்கிறதோ?" என்று ஆவலோடு கேட்டார் ராம்சிங்.

"இரண்டு மூன்று தடவை வண்ணார்பேட்டை வக்கீலையாவிடமிருந்து இவரைத் தேடிக் கொண்டு ஆள் வந்தது. இப்போது வக்கீலையாவின் கார் வந்து இங்கேயே காத்திருக்கிறது. பையா, அந்த டிரைவரைக் கூப்பிடு!" என்றார் விடுதியாளர்.

"ஓ! அப்படியா சமாசாரம்! பலே! தம்பி, அப்படியானால் ஒரு காரியம் செய்யுங்கள். நம்முடைய மிட்டாய்க் கடையிலிருந்து ஹல்வா வரவழைக்கிறேன். இந்த விடுதியிலே கட்கட மசாலா தோசை இருக்கிறது! இரண்டையும் சாப்பிட்டு விட்டுச் சூடான பால் ஒரு கப் குடித்து விட்டு, ஆனந்தமாகப் புறப்படுங்கள்!" என்று உற்சாகத்தோடு கூறினார் லாலா ராம்சிங்.

(அடுத்த இதழில் முடியும்)

# சுமைதாங்கி



"இருபத்தைந்து வயது நிரம்பிய இளைஞன் சுமைதாங்கி. இல்லத்திருந்த உறவினர் தந்த அன்புச் சுமைதாங்கி. பருவத்திரண்ட பாவை கொடுத்த காதற்சுமை தாங்கி. வளர்ந்த சகோதரன் வேலை இழக்க அவனும் சுமைதாங்கி. வாழும் தங்கையின் கணவனுக்காக சேரும் சுமைதாங்கி. வாட்டத்திலும் ஒரு மகிழ்ச்சி அடைந்தவன் கடைசியே சுமைதாங்கி"—ஆம். இது தான் சுமைதாங்கியின் கதை.

ஜெமினி கணேசன் தான் பாபுவாக வருகிறார். ஆரம்பத்தில் கல்லூரி மாணவனாக விட்டம் சபதம் கூறி அதன்படி ராதாவைக் காதலிக்க முயன்ற கட்டம் பலே ஜோர். உபாத்தியாயரிடம் "ரோமியோ — ஜூலியத்" கதையைக் கேட்டுக் கொண்டே அவர் பெண் ராதாவுடன் விரிவாகவே பேசுவதும், தடுமாறித் தவிப்பதும் சபாஷ் போடவைக்கின்றன. இடைவேளைக்குப் பிறகு இக்கதைக்கும் சேர்த்து வைத்து அவர் கண்ணீர் விடுகிறார். கடைசியில் உற்றாரை மறந்து உறவினரைத் துறந்து கிறிஸ்தவப் பாதிரியாகி நடிப்பில் சிறந்து நம் மனத்தில் நிறைந்து விடுகிறார்.

நடிப்பில் முதல் இடம் பெறுபவர் தேவிகா. அவர்தான் உபாத்தியாயர் மகள் ராதா. கருக் கருக்கென்று பேசுவதும், கடச் கடப் பதில் கொடுப்பதும், பிறகு காதலில் குழைவதும், இறுதியில் காதலில் ஏமாற்றம் அடைந்து துடிப்பதும் எல்லோருடைய மனத்திலும் பதிந்து விடுகின்றன.

முத்துராமனின் நடிப்பு மெருகு பெற்றிருக்கிறது. குடும்பப்பொறுப்பு, பாசம் இரண்டையும் நன்கு வகிப்பதோடு சமயங்களில் அவரால் சிறவும் முடிகிறதே!

பாபுவின் தோழன் பாகத்தை ஏற்றுப் படத்தின் ஹாஸ்ய அம்சத்துக்கே உறைவிடமாக விளங்குகிறார் நாகேஷ். அநுபவம் முதிர்ந்த ஹாஸ்ய நடிகரான கே. சாரங்கபாணியின் பாணியே தனியானது.

எல். விஜயலட்சுமியின் தோற்றம்தான் எடுப்பாக இருக்கிறதே தவிர நடிப்பு...?

உருக்கமான சில சம்பவங்களை வைத்துக் கொண்டு கதை பின்னப்பட்டிருப்பதால் பார்ப்பவர்கள் பலர் உருகிப் போகலாம். ஆனால் விமரிசனக் கண்கொண்டு பார்த்தால்...! குடும்பத்தில் சாதாரணமாக ஏற்படும் கஷ்டங்களுக்காக ஒரு படித்த வாலிபன் வீட்டை விட்டே ஓடுவதும், காதலில் தோல்வியுற்ற காரணத்துக்காகக் கிறிஸ்துவப் பாதிரியாக மாறுவதும் என்ன கதையோ! எல்லைப் புறத்தில் அந்நியன் ஆக்கிரமித்துத் தொல்லை கொடுக்கும் வேளையில் இத்தகைய கோழைத்தனம் பிரசாரம் செய்யப்படலாமா?

கதாநாயகன் ஒரு பாட்டைப் பாடிக் கொண்டு, காடு, மலை, வனந்திரங்களைக் கடந்து செல்வது நம் தமிழ்ப் படங்களின் விசேஷ அம்சமாகி விட்டது. அந்த அம்சம் "சுமைதாங்கி"யை மட்டும் தப்ப விட்டுவிடவில்லை. "மனிதன் என்பவன்" என்னும் ஒரு சுவையான பாட்டைப் பாடிக் கொண்டு பாபு நடக்கிறான். "ராதைக் கேற்ற கண்ணனோ" என்ற பாட்டு நன்றாயிருக்கிறது.

"சுமைதாங்கி"யில் சுமையாக வரும் காட்சிகளுக்கு இடையில் சுவையாக நினைவில் வைத்துச் சுவைக்க வேண்டிய காட்சிகளும் நிறைய வருகின்றன.






கதாநாயகன், கதாநாயகி இருவரும் வாலிப வயதினராக இருக்க வேண்டும் என்பதுதான் நம் சினிமாப் படங்களின் நியதி. அந்த நியதி ஏவி. எம்.மின் தயாரிப்பான இந்தப் படத்தில் அடியோடு மாறியிருக்கிறது. அதுவே புதுமையானதொரு சிறப்பாக அமைந்து விட்டது. அதற்குக் காரணம் கதையின் அமைப்புத்தான்.

மக்கட் பேற்றுக்காக ஏங்கும் ஒரு பேதைப் பெண்ணின் கதைதான் "அன்னை". சாவித்திரியின் முதல் குழந்தை பிறந்ததும் இறந்து விடுகிறது. இத்துடன் அவளுக்கு மழலைச் செல்வம் வாழ்நாள் முழுவதும் கிட்டாத பாக்கியமாகவே இருந்து விடும் என்று ஆஸ்பத்திரியில் கூறிவிடுகிறார்கள். அதுவே அவளுக்கு ஒரு மன நோயாகிவிடுகிறது. சாவித்திரியின் தங்கை சீதா ஓர் அநாதை மனிதனைக் காதலித்து மணம் புரிந்து கொண்ட காரணத்தினால் பெற்றோர்களின் வெறுப்புக்குப் பாத்திரமானதோடு ஒரு குழந்தைக்கும் தாயாகி விடுகிறாள். சாவித்திரி அந்தக் குழந்தையை வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறாள்; குழந்தை தன் மகனாகவே இருக்க வேண்டும் என்பதற்காகச் சீதாவை வெளியேற்றி விடுகிறாள். பல்லாண்டுகள் கழிந்து, சீதா முடமாகிவிட்ட தன் கணவனுடன் மகனைக் காணும் ஆசையால் சாவித்திரியைத் தேடிக் கொண்டு வருகிறாள். அவள் மகன் செல்வம் அப்பொழுது வைத்தியக் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிறான். இதற்கு மேல்தான் படம் களை கட்டுகிறது. பிள்ளை அவளைப் பெற்றவளுக்குச் சொந்தமா, அல்லது வளர்த்தவளுக்குச் சொந்தமா என்பது பெரிய பிரச்னையாகிப் படத்தைக் கடைசி வரையில் ஓட்டுகிறது. இறுதியில், பல அசம்பாவிதமான நிகழ்ச்சிகளுக்குப் பிறகு பெற்றவள், வளர்த்தவள் இருவருக்குமே பிள்ளை சொந்தம் என்பது முடிவாகிறது.

பானுமதியின் நடிப்புக்கு என்றுமே தனி மதிப்பு உண்டு. எந்தப் பாத்திரத்தை ஏற்றாலும் தத்ரூபமாக மாறி நடிக்கும் தனி ஆற்றல் படைத்தவர் பானுமதி. "அன்னை"யிலும் சாவித்திரி பாத்திரத்தில் அவர் நடிப்பு முழுமையிலும் சிறந்து விளங்குகிறது. சிறிது காலமாக அவரை வெள்ளித்திரையில் காணாமல் இருந்ததற்கு இப்பொழுது வட்டியும் முதலுமாக நடிப்பு விருந்தளித்து விட்டார். பானுமதி பாடும் "பூவாகிக் காயாகிக் கனிந்த மரம் ஒன்று" என்ற பாட்டு நன்றாயிருக்கிறது.

எஸ். வி. ரங்காராவ் சாவித்திரியின் கணவராக வந்து அதியற்புதமாக நடித்திருக்கிறார்.

"அன்னை"யை அழகூட்டும் காட்சி சந்திரபாபு — நாகேஷ் நடிக்கும் "லைலா — மஜ்னூன்" இசை நாடகம். மஜ்னூன் பாகத்தை ஏற்ற சந்திரபாபுவின் நடிப்பும் நடனமும் அபாரமாயிருக்கின்றன. நாகேஷ் மஜ்னூனுக்கு ஏற்ற லைலா என்ற பெயரை அநாயாசமாகத் தட்டிக் கொண்டு போகிறார். அந்தக் கட்டத்தில் கொத்தமங்கலம் சுப்புவின் பாடல்கள் தமாஷாயிருக்கின்றன.

அன்னையின் அருள் உள்ளத்தைக் காட்டுவதாக எண்ணிப் பல அநாதைகளை அவள் ஆதரித்து வருவதாகக் காட்டுவது வெறும் அலட்டுத்தனமாகத் தோன்றுகிறது. அநாதைப் பித்துக்குளிகள் போடும் கூச்சலும், செய்யும் கோணங்கித்தனமான காரியங்களும் கொஞ்சமும் ரசிக்க முடியவில்லையே! சந்திரபாபு பெருச்சாளி வேட்டையாடுவதும், பெருச்சாளிகள் தூங்குகிற பித்துக்குளிகள் மீதெல்லாம் ஏறி ஓடுவதும் அசிங்கமாயில்லையா? படத்தில் சிரிப்பு வேண்டுமென்றால் சிந்தித்து நல்ல முறையில் அமைக்கக் கூடாதா? சம்பவங்களில் உள்ள ஹாஸ்யங்கள் சிரிக்கக் கூடியதாயில்லை; ஆனால் தயாரிப்பாளர்களின் அசட்டுத்தனத்தை எண்ணித்தான் சிரிக்க வேண்டியிருக்கிறது. மேற்படி காட்சிகள் பொறுமையை ரொம்பச் சோதிக்கின்றன.

சௌகார் ஜானகி சீதாவின் பாகத்தில் தோன்றிக் கண்ணீரில் மிதந்து கரை காணாத் துயரத்தில் கரைந்து போகிறார். கண்ணாம்பா, எம். வி. ராஜம்மா இவர்களோடு தாயார் வேஷத்துக்கு இன்னொருவராகச் சௌகார் ஜானகியைச் சேர்த்துவிட வேண்டியதுதான். தாய்ப் பாசத்தை வெகு அழகாக அவரால் வெளிப்படுத்த முடிகிறதே!

டி. எஸ். முத்தையா சீதாவின் கணவன். வீடிழந்து, வாசல் இழந்து, கடைசியில் ஒரு காலையும் இழந்து தவிக்கும் பாத்திரமானாலும் நடிப்பை அவர் என்றுமே இழந்துவிடவில்லை.

குமாரி சரஸ்வதி இன்னும் நடிப்பு நன்கு பயிலவேண்டும். வனப்பும் கவர்ச்சியும் மட்டும் இருந்தால் போதுமா?

கிருஷ்ணன் — பஞ்சு டைரக்ஷன் என்பதை மெய்ப்பிக்கப் பல தத்ரூபமான குடும்பக் காட்சிகள் தோன்றுகின்றன.

ஒரே மாதிரிப் படங்களைப் பார்த்து அலுத்துப் போயிருக்கிற சமயத்தில் சற்று மாறுதலான கதைப் போக்கைக் கொண்ட "அன்னை" ஆறுதலளிக்கிறாள். —காந்தன்

# அம்மா நல்லவள்

உமா குருமூர்த்தி

பத்மாவுக்கு அழுகை குமுறிக் கொண்டு வந்தது. 'அவள் என்றைக்குமே சிறு குழந்தையாக இருந்திருக்கக் கூடாதா?'

திடீரென்று அளவிட முடியாத ஏக்கம் அவள் நெஞ்சில் பரவிப் படர்ந்தது.

''பெண் வளர்த்தியோ பீர்க்கங்காய் வளர்த்தியோ என்பார்கள். அது போல், நம் பத்மாதான் எப்படி வளர்ந்து விட்டாள்?'' என்று அம்மா அடிக்கடி சொல்வது போல அவள் ஏன் 'கிடு கிடு' என்று பெரியவளாய் வளர்ந்தாள்?

விவரிக்க இயலாத ஊமை வேதனையின் பாபத்தில் பத்மாவின் நெஞ்சு பரிதாபமாய் அழுந்தியது. விழிக்கடையில் நீர் முத்துக்கள் கோத்துக் கொண்டன.

''பத்மாக்கண்ணு, வரயாம்மா, உனக்குத் தலை சீவி விடறேன்....''

வேலைக்காரி வள்ளியின் குரலைக் கேட்டதும் சட்டென்று கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந்தாள் சிறுமி பத்மா. தம்பி பாபுவின் ஈர உடலைத் துடைத்தபடியே குளியலறையிலிருந்து வந்து கொண்டிருந்த வள்ளி, பத்மாவைக் கண்டதும், ''தம்பிக்கு நிசார், சொக்காய் எடுத்துக் கொடு. உனக்கும் நல்ல பின்னி விடுகிறேன், வா!'' என்றாள்.

பத்மா அலமாரியிலிருந்து சலவைச் சட்டையை எடுத்துப் பாபுவுக்கு அணிவிக்க முன் வந்தாள். 'வெடுக்' கென்று அவளிடமிருந்து அதைப் பிடுங்கி வீசி எறிந்தான் பாபு.

''எனக்கு இது ஒண்ணும் வேண்டாம், போ. அன்றைக்குப் புதுசா தைச்சதே அந்தச் சொக்காய்தான் எனக்கு வேணும்...''

பாபு பிடிவாதம் பிடித்தான். பத்மாவுக்குக் கோபம் கோபமாக வந்தது. அவன் முதுகில் நாலு அறை வைக்க அவள் கைகள் பரபரத்தன. அவனை அடித்து விட்டால் அப்புறம் ஏற்படுவது பிரளயம்தான். உருண்டு, புரண்டு, அழுது ஆகாத்தியம் செய்யும் அவன் கூச்சல், மாடியில் பத்திரிகை படித்துக் கொண்டிருக்கும் அவர்கள் தந்தையை வரவழைத்து விடும்.

அப்பா பத்மாவைத்தான் கோபித்துக் கொள்வார். ஏனென்றால் அவள் பெரியவள்.

ஏன்தான் அவள் பெரியவளாய்ப் பிறந்து தொலைத்தாளோ?.....

பத்மா சிரமப்பட்டுத் தன் மனத்தை அடக்கித் தம்பியிடம் கனிவாகப் பேசலானாள்.

''பாபுக் கண்ணு.... நீ சமர்த்தோன்னோ? நல்ல பையனாச்சே! புதுச் சொக்காயை, நம்ம பள்ளிக்கூடத்திலே 'எக்ஸ்கர்ஷன்' போறப்போதான் போட்டுக்க வேணும்னு நீதானே அன்னைக்கு அதை மடிச்சுப் பீரோவிலே வைச்சே?''

''ஆமாம், வைச்சேன். இன்னிக்குப் போட்டுக்கணும்னு ஆசையாயிருக்கு.''

''சரி, எனக்கென்ன, எடுத்துத் தரேன். உன்னோடது பழசாகப் போகட்டும். அக்காவுடையது அப்படியே புதிசா, பளபளன்னு...''

பத்மா முடிப்பதற்குள் 'பர பர' வென்று சலவைச் சட்டையை எடுத்துத் தானே அணிந்து கொண்டான் பாபு.

''நீல நிசாரும், வெள்ளை 'சில்க்' குச் சொக்காயும், 'ஜில்' லுன்னு ஆபீசர் கணக்கா இருக்கு, பாபுத் தம்பி! நீ நல்ல பிள்ளை ஆச்சே. அக்காவைப் படுத்த லாமா?''





வள்ளியின் சொற்கள் பாபுவின் முகத்தை மலரச் செய்தன.

"சரி! நான் அப்பாகிட்டே போய்த் தலை வாரிக்கப் போகிறேன்...." என்றவனாய் மாடிக்கு ஓடினான். அவனுக்கு வள்ளியிடம் 'டிரஸ்' செய்து கொள்ளப் பிடிக்காது.

பத்மா எண்ணெய்ச் சீசாவும், சீப்பும் எடுத்துக் கொண்டு வந்து வள்ளியின் முன்னால் அமர்ந்தாள்.

"வள்ளி! இன்னிக்கு எனக்கு இரட்டைப் பின்னல் பின்னி விடேன்."

பத்மா ஆவலுடன் வள்ளியின் முகத்தை நோக்கினாள்.

"அந்த நாகரிகம் எல்லாம் எனக்கு வராது, கண்ணு. நான் சுத்த நாட்டுப்புறம் ஆச்சே? ஏதோ 'காமா, சோமா'ன்னு சடை போடுவேன்....." கபடமற்றுச் சிரித்தாள் வள்ளி.

பத்மா அதிருப்தியுடன் ஒற்றை சீப்பினை எடுத்துக்கொடுத்தாள். அவளுக்குக் குழந்தை முதலே தலை மயிர் அதிகம். 'கரு கரு' வென்று அலைஅலையாகப் பருத்து முகத்துக்கே தனிச் சோபை அளித்துக் கொண்டிருக்கும் சிகை.... தோகையாகப் படர்ந்த கூந்தலை, அம்மா இழைய இழைய வாரிப் பின்னலிட்டாளானால், இரை நிறை பாம்பு போல் பின்னல் கனத்து இடுப்புக்குக் கீழ் தொங்கும். இந்த வள்ளிக்கு எங்கே நன்றாய்ப் பின்னல் போடத் தெரிகிறது? முகத்தைத் திருப்பினால் பின்னலும் கூடவே அசையும்படி அவ்வளவு இறுக்கமாக.... பிடரியில் சிலும்பலாய், சீப்பன் முடிச்சு கசங்கிச் சுருண்டு...

'சீ! இந்த வள்ளியே சுத்த மோசம்!'

முணுமுணுத்தபடியே பத்மா முன்னுச்சியைத் தூக்கிவாரிக் கொண்டு முகத்தை அழகுபடுத்திக் கொள்வதில் முனைந்தாள். அன்றைக்கு என்னவோ அவளுக்குத் திலகம் சரியாகவே வரவில்லை. கலைத்து விட்டு மறுபடியும் இடுவதென்றால் சிவப்புச் சாந்து நெற்றி முழுவதும் தீற்றி விடும். அப்புறம் முகம் கழுவுவது ஓர் அநாவசிய வேலை. அதுவுமல்லாமல் நேரம் எங்கே இருக்கிறது?

கூடத்துக் கடிகாரத்தில் மணி ஒன்பது அடித்தது.

'உக்கும்! எல்லாம் இருக்கிற அழகு போதும். அம்மா இருந்து செய்தால் அலங்காரம் ஜோராய்த்தான் இருக்கும். தானே செய்து கொண்டால் அப்படித்தான். பள்ளிக்கூடத்துக்குப் படிக்கத்தானே போகிறோம்.'

பத்மா அலுத்தபடியே தனக்கும், பாபுவுக்கும் சாப்பிடுவதற்குத் தயார் செய்தாள்.

"அக்கா! சாதம் போட வரட்டுமான்னு அப்பா கேட்கிறார்...." என்றபடியே பாபு வந்து அமர்ந்தான்.

"வேண்டாம். அப்பாவுக்கு ஆபீசுக்கு நேரமாச்சு. 'குளிக்க வரச் சொன்னேன்'னு சொல்லிட்டு வந்துடு. அதுக்குள்ளே நான் உனக்குத் தட்டிலே சாதம் போட்டு வைக்கிறேன். இந்தா நெய்."

உள்ளங் கையில் பத்மா வைத்த நெய் விழுதைக் கரைத்தபடியே மாடிக்கு ஓடினான் பாபு. அடுத்த நிமிடம் அவனுடன், அப்பாவும் அங்கே வந்து சேர்ந்தார்.

"சாப்பிடுகிறேளா அம்மா? பாபு! சமர்த்தாய்ச் சாப்பிடணும். நான் வேணுமானால் போடட்டுமா பத்மா?"

அப்பா கைகளில் சோப்புப் பெட்டியும் டவலுமாகச் சாப்பாட்டுக் கூடத்துக்குள் நுழைந்தார்.

தினமும் அவர் இப்படித்தான் ஒப்புக்குக் கேட்பது வழக்கம். ஆனால் பாவம், அவருக்குத் தமக்குச் சாப்பாடு போட்டுக் கொண்டு கூடச் சாப்பிடத் தெரியாது. பத்மாதான் அடுக்காக அது அதை அவர் தட்டின் அருகில் வைத்து விட்டுப் போவாள்.

"வேண்டாம், அப்பா! நீங்கள் போய்க் குளியுங்கள்."

பத்மா தம்பிக்கு மோர் ஊற்றி விட்டுத் தான் சாப்பிட உட்கார்ந்தாள்.

"அக்கா!"

"என்னடா, பாதி சாப்பிடும் போது தொந்தரவு செய்கிறே? இன்னும் என்ன வேணும் உனக்கு?"

பாபு எப்போதும் 'நட்டலை'க்காரன்; அது சொத்தை, இது சொள்ளை என்று சாப்பிட ஆயிரம் பாடு படுத்துவான். தினமும் பத்மாவுக்குப் போதும் போதுமென்றாகிவிடும். அவள்தான் பொறுமையுடன் அவனைக் கவனித்துக் கொள்ள வேண்டும். தப்பித் தவறித் திட்டி விட்டாலோ அவன் செய்யும் ரகளையில் குளியல் அறையிலிருந்து உடல் எல்லாம் சோப்பு நுரை வழிய அப்பா அங்கே வந்து விடுவார்.

"உங்களைக் கட்டி மேய்ப்பதே பெரிய தொல்லையாகப் போச்சு, பத்மா! உனக்கும் அவனுக்கும் எத்தனை வயசு வித்தியாசம்?"

"அக்காவுக்குப் பத்து. எனக்கு ஆறு...; ஆக.... நாலு வயசு...."

பாபு மெல்லச் சீண்டுவான்.

"போடா, தடியா! உன்னை ஒண்ணும் கேட்கவில்லை!" பத்மா பல்லைக் கடிப்பாள்.

"பத்மா! நீ பெரியவள். அவனுடன் சண்டை போடலாமா? பெரியவங்க பொறுத்துத்தான் போகணும்" என்பார் அப்பா.

'ஏன்தான் அவள் பெரியவளாகப் பிறந்து தொலைத்தாளோ? என்றைக்குமே சிறு குழந்தையாய் இருந்திருக்கக் கூடாதா?'

வாய்ப்பாட்டும்...



''தொந்தரவு செய்யாதே அக்கா! அம்மா தயிர் சாதம் பிசைந்து போட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்? காலை வேளையிலே அம்மா கையாலே சாப்பிட்டு எத்தனை நாளாச்சு!''

பத்ம மலரின் செவ்விதழ்கள் காற்றில் படபடப்பது போல் பத்மாவின் இதழ்கள் நெருங்கி யிருந்து பிரிட்ட பொருமலில் துடித்தன.

''இப்போ, நாமெல்லாம் பெரியவர்களாகி விட்டோமோல்லியோ? நம்ம காரியத்தை நாமேதான் செய்து கொள்ள வேணும்.....''

குழந்தைகளின் சொற்களில் படிந்திருந்த ஏக்கம், குளித்து விட்டு வந்து கொண்டிருந்த அப்பாவின் மனத்தை என்னவோ செய்தது.

''பெற்ற குழந்தைகளுக்கு வேளைக்குப் பார்த்துச் சாப்பாடுகூடப் போட முடியாமல் உங்கம்மாவுக்கு என்ன உத்தியோகம் வேண்டிக் கிடக்கோ? இங்கே வீட்டிலே குழந்தைகள் திண்டாடித் தவிக்கின்றன. அங்கே பள்ளிக்கூடத்திலே பசங்களுக்குச் சாதம் ஊட்டுறாளாம். கதை சொல்றாளாம். பெரிய சேவை செய்யறாளாம் சேவை.''

அப்பா கோப மிகுதியால் படபடத்தார். பாபு ஆவலுடன் அப்பாவின் அருகில் வந்து நின்று கொண்டான்.

''அப்பா! அம்மா, பள்ளிக்கூடத்துப் பசங்களுக்குப் படிப்புச் சொல்லித் தருகிறது இல்லே? சாதமா ஊட்டுவாள்?''

''அறிவு புகட்டுகிற ஆசிரியை அன்னமும் தான் ஊட்டுறாள். பெரிய சேவகி ஆச்சே!''

பாபுவுக்கு அப்பாவின் பேச்சுப் புரியவில்லை. ஆனால் பள்ளிப் பிள்ளைகளுக்கு அம்மா சாதம் ஊட்டுகிறாள். அந்தக் குழந்தைகளுக்குத் தேவையானவற்றை அவள் கையாலேயே செய்கிறாள் என்பது மட்டும் புரிந்தது.

''அப்பா! அப்பாகண்ணு, நானும் அந்தப் பள்ளிக்கூடத்திலேயே படிக்கிறேம்பா!'' என்றான் ஆதங்கத்துடன்.

''போடா, அசத்து!''

அப்பா பரபரப்புடன் தலைவாரிக் கொண்ட மாடிக்குப் போய் விட்டார். ஆபீசுக்கு நேரமாகி விடுமே என்கிற கவலை அவருக்கு.

அடுப்படியில் அவனுக்கு ஒரு சம்புடத்தில் தயாராக வைக்கப்பட்டிருந்த டிபனை எடுத்துக் கொண்டு, பத்மாவும் பாபுவும் பள்ளிக்குப் புறப்பட்டார்கள். அப்பா சாப்பிட்டானதும், வள்ளி வந்து மிகுந்ததை எடுத்துக் கொண்டு அந்த இடத்தைச் சுத்தம் செய்து வைப்பாள். அப்பா ஆபீசுக்குப் போகும் போது முக்கியமான அறைகள் எல்லாம் பூட்டிக் கொண்டு போய் விடுவார். அந்த அறைகளுக்கெல்லாம் அம்மா விடும் மறு சாவி இருக்கும். மாலையில் அவர்கள் வரும் வரை வீட்டுக்குக் காவல் வள்ளிதான். பாவம், வள்ளி ரொம்ப நல்லவள். எவ்வளவு பொறுப்பாக வேலைகளை யெல்லாம் செய்கிறாள்!

அம்மாவுக்கு ஒன்பது மணிக்குப் பள்ளிக்கூடம். ஆகையால் காலை எட்டு மணிக்கே கிளம்பி விடுவாள். அதற்குள் சமையல், டிபன் எல்லாம் செய்து முடித்து, குழந்தைகளுக்கு எடுத்து வைத்துவிட்டுத் தனக்கும் கட்டிக் கொண்டு போவாள். மாலையில் அம்மா வருவதற்கு ஐந்து மணி ஆகிவிடும்.

ராத்திரி சாப்பாடு அவர்களுக்கு அப்பா சொல்லுவது போல் தேவாமிர்தம். கூட்டுக் கறி, சாம்பார், இல்லையென்றால் கூட்டு, ரசம். மணக்க மணக்கச் சமைத்து 'டான்' என்று ஏழரை மணிக்கெல்லாம் அம்மா தன் கையாலேயே போடுவாள். அப்போது தான் அவர்கள் காலையில் பள்ளி சென்றதும் வீட்டில் நடந்த அமர்க்களத்தை யெல்லாம் விவரிப்பார்கள். வள்ளி சரியாகப் பிசைந்து போடாதது, பாபு சாப்பிடப் படுத்தியது ஆகியவற்றை யெல்லாம் பத்மா ஒப்புவிப்பாள். அதற்கால் அப்பா திட்டுவார் என்று அக்கா தன்னைச் சத்தமின்றிக் கிள்ளியதையும் அப்பா, அம்மா வேலைக்குச் செல்லுவதைப் பற்றி முணுமுணுப்பதையும் பேசித்தீர்ப்பான் பாபு.

'' வர வர நீங்கள் பெரியவர்களாக வளர்ந்து வருகிறீர்கள் இல்லையா? தன் வேலையைத் தானே செய்து கொள்ளத் தெரிய வேண்டாமா?'' என்று அன்புடன் கூறிய படியே அம்மா புன்சிரிப்புடன் அனைத்தையும் ஏற்றுக் கொள்வாளே தவிர, ''இனி நான் வேலைக்குப் போகவேண்டாம், கண்ணு! வீட்டிலேயே இருந்து கவனிக்கிறேன்....'' என்று சொல்ல மாட்டாள்.

அம்மா, நல்ல அம்மாதான். பாவம்! வீட்டிலேயும் உழைச்சிட்டுப் பள்ளிக்கூடத்திலேயும் வேலை செய்கிறாள். ஆனால் அம்மா ஏன் இப்படி உழைக்கணும்? அப்பாதான் அம்மா வேலைக்குப் போக வேண்டியதே இல்லேன்னு சொல்கிறாரே...

டீச்சர் வேலையில் அம்மாவுக்கு அவ்வளவு ஆசையா?

அன்று, பத்மாவின் வகுப்பில் திடீரென்று அவர்களை ஊனமடைந்தோர் பள்ளிக்கு அழைத்துச் செல்ல உத்தேசித்திருந்தார்கள். வானொலியின் சிறுவர் நிகழ்ச்சியில் பத்மாவின் பள்ளி மாணவ மாணவியர் பங்கு பெற இருந்தார்கள். அதற்காக ஊனமடைந்தோர் பள்ளியில் பயிலும் மாணவ மாணவியரைப் பற்றி அவர்களுடைய கல்வி, பழக்க வழக்கங்கள் இவை பற்றிப் பத்மா

...வாய் படுத்தும் பாடும்!



வும், மற்றும் சில மாணவிகளும் உரையாடல் நிகழ்த்த வேண்டும் என்று ஏற்பாடு. அவ்வுரையாடலைத் தயாரிக்க நேரிலேயே அந்தப் பள்ளியைக் கண்டு வர, குறிப்பிட்ட சில மாணவ மாணவியர் தம் ஆசிரியைகளுடன் புறப்பட்டார்கள். பத்மா தலைமை ஆசிரியையிடம் பாபுவையும் தன்னுடன் அழைத்துச் செல்ல அனுமதி பெற்றுக் கொண்டு புறப்பட்டாள்.

அந்தப் பள்ளியில்தான் எவ்வளவு குழந்தைகள்! ஒன்றிரண்டு குழந்தைகளுக்கு வலது கை ஊனம்; ஒன்றுக்கு இரண்டு கைகளுமே பாதிதான் இருந்தது. சிலவற்றுக்குக் கால் நொண்டி. சில பேருக்குக் கண்கள் ஒளியிழந்து இருந்தன. சில குழந்தைகளுக்குக் காது கேட்கவில்லை; வாயும் பேசவில்லை.

'பாவம்! கடவுள் ஏன்தான் இவர்களை யெல்லாம் இப்படிப் படைச்சிருக்காரோ!' பாபுவுக்கு மிகவும் பரிதாபமாக இருந்தது.

பேச முடியாத குழந்தைகள் கரும்பலகையில் எழுதிக் காட்டிய பாடங்கள், கண்ணற்ற சிறுவர், சிறுமியர் கைகளால் தடவித் தடவி, தட்டுத் தடங்கலின்றிப் படிக்கும் அழகு, கையற்றவர்களாயினும் கால்களின் துணை கொண்டு 'பலப்பத்'தால் எழுதிக் காட்டிய சித்திரங்கள்....

பத்மாவுக்கு அழுகையே வந்து விட்டது.

ஒவ்வொரு வகுப்பாகத் தன் ஆசிரியையுடன் வந்தார்கள், பத்மாவும், பாபுவும், மற்ற மாணவிகளும். தலைமை ஆசிரியையின் இருப்பிடத்துக்கு அருகில் அமைந்திருந்த வகுப்புக்கு அவர்கள் சென்ற போது....

அங்கே—ஐந்து வயதுக்கும் உட்பட்ட பிஞ்சுக் குழந்தை ஒன்றுக்கு உடை மாற்றித் தலை சீவி அழகு செய்து கொண்டிருந்தாள் பத்மாவின் அம்மா!

கருள் கருளாய்ப் படலங்காய்க் கொடி போல் அழகான தலை மயிர். செக்கச் செவேல்னு அந்தப் பெண் குழந்தை மிகவும் அழகாயிருந்தது. ஆனால் அதன் கருவிழிகளில் சூனியம்.....

பாபுவுக்கு அம்மாவை அங்கே கண்டதும் ஆச்சரியம் தாளவில்லை. பத்மாவுக்கு ஒரே வியப்பு !

''நமஸ்தே, டீச்சர்!''

பத்மாவின் ஆசிரியை, அவள் அம்மாவை நோக்கிக் கைகுவித்ததும்தான் அவர்களுக்கு விஷயம் புரிந்தது.

'ஓ! அம்மாவுக்கு இந்தப் பள்ளியிலே தான் டீச்சர் வேலையா?'

காணும் சக்தி இழந்து ஒளி மங்கிக் கிடந்த கண்களுடைய அச்சிறு குழந்தையைப் போல் மற்ற அவயவங்கள் 'பின்னப்' பட்டிருந்த சின்னஞ்சிறு பிஞ்சு உருவங்கள்!

''தேவகி.... மேரி... ராஜா...!''

பாபுவின் அம்மா அழைத்ததும் அக் குழந்தைகள் வரிசையாய் வந்து நின்றார்கள்.

அம்மாவின் உத்தரவுப்படி. இல்லை, இல்லை — அவர்கள் டீச்சரின் உத்தரவுப்படி வணக்கம் தெரிவித்தார்கள். அ, ஆவன்னு சொன்னார்கள்; ஒன்று இரண்டு சொல்லி விட்டு, 'ஓடி விளையாடு பாப்பா' என்று இனிமையாகப் பாடிக் காட்டினார்கள். குழந்தைக் குரலில் அவர்கள் ஒன்றாகப் பாடியது எவ்வளவு அருமையாக இருந்தது!

பத்மாவுக்கு உடல் புல்லரித்தது.

அன்று மாலை வழக்கம்போல் பள்ளி முடிந்து வீடு திரும்புகையில், பத்மாவுக்கும் பாபுவுக்கும் அம்மாவின் பள்ளிக் குழந்தைகளைப் பற்றிய நினைவுதான்.

மறு நாள். காலையில் வழக்கம்போல் பாபு தன்னிடம் தலை வாரிக்கொள்ள வராதது கண்டு அப்பாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. தினத்தைப் போல் இன்று அமர்க்களம் எதுவும்கூடக் காணோம்! ஒரு வேளை, அவர்கள் அம்மா அன்றைக்கு லீவு போட்டிருக்கிறாளா?

அப்பா வியப்புடன் கீழே இறங்கி வந்தார். பாபு கண்ணாடியின் முன் நின்று தானே தலையை வாரிக் கொண்டிருந்தான். பத்மா எதுவும் முணுமுணுக்காமல் அமரிக்கையாகப் பாபுவின் தட்டில் பருப்புச் சாதத்தைப் பிசைந்து கொண்டிருந்தாள்.

''என்ன குழந்தைகளா? இன்னிக்கு என்ன இங்கே சத்தத்தையே காணோமே? பாபுகூட மாடிக்கு டிராமா செய்து கொள்ள வரவில்லை? உங்க அம்மா வேலையை விட்டு விட்டாளா, இல்லே லீவு போட்டிருக்காளான்னு எனக்குச் சந்தேகமாக இருக்கு!''

''லீவும் போடலே. வேலையையும் விடவில்லே. வழக்கம் போல் எட்டு மணிக்குப் போயாச்சு. எங்களுக்காக அம்மா அந்த டீச்சர் வேலையை விடறது நல்லதா அப்பா?''

பத்மாவின் பேச்சை வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தார் அப்பா.

''அம்மா எங்களுக்கு மட்டும் அம்மா இல்லே அப்பா! கண் தெரியாமல், கால் கை விளங்காமல், வாய் பேசாமல் தவிக்கிற 'அந்த'ப் பள்ளிக் குழந்தைகளுக்கும்தான் அம்மா. எங்களைவிட அவர்களுக்குத்தான் அம்மா ரொம்பச் சொந்தம். அவர்களுக்குத் தான் அம்மாவின் சேவை மிகவும் தேவை. எங்களுக்குத் தங்கள் வேலையைத் தாங்களே செய்து கொள்ள எல்லா அவயவங்களும் நன்றாக இருக்கு. பாவம், அந்தக் குழந்தைகள்.....நேத்திக்கு எங்க 'ஸ்கூல்' டீச்சர் அழைச்சிண்டு போனான் அங்கே....''

பத்மாவுக்கு அழுகையே வந்துவிட்டது.

''ஆமாம், அப்பா! நமக்கு மட்டும் அம்மாவாக வீட்டிலே இருந்து வேணுங்கிறதை எல்லாம் செய்யலேயேன்னு நான்கூட இனிமேல் நினைக்கவே மாட்டேன். என் வேலையை நானே செய்யப் பழகிண்டு பிறத்தியாருக்கும் உதவி செய்வேன்....''

பாபு பெரிய மனிதன் போல் பேசினான். அப்பா அதிர்ந்து போய் நின்றார். அந்த இளம் இதயங்கள் தாயின் புனிதமான தொண்டைப் புரிந்து கொண்டன.

''நீ இனி அம்மாவை வேலைக்குப் போக வேண்டாம் என்று சொல்லாதே, அப்பா...''

பாபுவின் வேண்டுகோளைக் கேட்டு, உணர்ச்சி வசப்பட்டுத் தம் தலையை அசைத்தார் அப்பா.

மறு தினம் காலையில் அம்மா பள்ளிக்கூடம் செல்லுகையில் பாபுவும் பத்மாவும் மகிழ்ச்சியுடன் வாசல் வரை சென்று அவளை வழியனுப்பினார்கள். நிர்மலமாகி விட்ட அவர்கள் உள்ளங்களில் எந்தவித மான ஏக்கமும் நிறைந்திருக்கவில்லை !

# அவன் பங்கு

அன்று புரட்டாசி சனிக்கிழமை. 'கோவிந்தாப் பிச்சை' கேட்க வந்தவர்களுக்குப் பிடி பிடியாக அரிசி போட்ட வண்ணம் திண்ணையில் உட்கார்ந்திருந்தார் திருவாளர் வைரக்கண்ணு. 'உண்மையாகவே பிறரது தர்மத்தை எதிர்பார்த்து வாழ வேண்டியவர்களுடன் அங்கஹீனராகவும், கர்ப்பஸ்திரீயாகவும், பணத்தைத் தொலைத்தவராகவும் வேஷம் போட்டுப் பிச்சை எடுப்பவர் எவ்வளவு பேர்? மாரியம்மன் காளியாய், ஈஸ்வரன் கைங்கரியம் என்றெல்லாம் தட்டமுடியாதபடி 'நன்கொடை' வாங்கும் பேர்வழிகள் எவ்வளவு பேர் செய்கிறார்கள்?' வைரக்கண்ணுவின் மனத்தில் 'பிச்சையில் பலவிதம்' பற்றிய இந்தச் சிந்தனை தான் பலமாக ஓடிக் கொண்டிருந்தது.

வைரக்கண்ணு பெரும் பணக்காரர். தமக்கு இருக்கும் சொத்தை அவராலேயே கணக்கிட்டுக் கூற முடியாது என்ற அளவுக்கு அவருக்குச் சொத்து இருந்தது.

அவர் அப்படிப் பிச்சையிட்டவாறு உட்கார்ந்திருந்த நேரத்தில்தான், அவரைத் தேடி 'டிப்டாப்'பாக ஆடை அணிந்த வாலிபன் ஒருவன் வந்தான். 'டியர் பிரதர்' என்று ஆரம்பித்தான்.

அவரும் மிக மரியாதையாக, "உட்கார் தம்பி!" என அவனுக்கு இருக்கை அளித்தார்.

"நாமெல்லாரும் அந்தப் பரம பிதாவின் புத்திரர்கள் என்பதைத் தாங்கள் அறிவீர்கள் அல்லவா?" என்று ஆரம்பித்தான் வாலிபன்.

ஒருவேளை இந்த வாலிபன் ஏதாவது மதப் பிரசாரகனாக இருப்பானோ என்ற எண்ணம் வைரக் கண்ணுவின் மனத்தில் ஓடியது. எம்மதமும் சம்மதம் என்ற கொள்கை உடைய அவர், "அதைப் பற்றிச் சந்தேகம் என்ன? ஒருவனே தேவன். அவனே பரம பிதா! அவன் புதல்வர்கள்தான் இவ்வுலகத்துவாழ் மாந்தர்கள் அனைவரும். அது மட்டுமா? ஏனைய உயிரினங்களுமே அவன் படைப்புத்தானே?" என்றார்.

"கரெக்ட்! என் கருத்தையே தாங்களும் கொண்டிருக்கிறீர்கள். ஆண்டவனின் புதல்வர்களாகிய நாம் அனைவரும் சகோதரர்களன்றோ?" என்றான் வாலிபன்.

பையன் ஒரு வேளை பாரதி விழாவுக்குச் சந்தா கேட்க வந்திருப்பானோ?

"ஆம். நீங்களும் வரும் போதே 'டியர் பிரதர்' என்றுதானே அழைத்துக் கொண்டு வந்தீர்கள்? நானும் 'உட்காருங்க தம்பி!' என்று கூறித்தானே உங்களுக்கு இருக்கை கொடுத்தேன்? இதிலிருந்தே நாம் சகோதரர்கள் என்பது தெளிவாகி விடவில்லையா?" என்றார் வைரக்கண்ணு.



"அதனால்தான் அண்ணா! நான் உங்களிடமிருந்து என் பாகத்தைப் பிரித்துக் கொண்டு போக வந்திருக்கிறேன். என் பங்கை எனக்குப் பிரித்துக் கொடுத்து விடுங்கள்!" என்றான் அந்த வாலிபன்.

'ஒரு வேளை இவ்வாலிபன் கிறுக்கனாயிருப்பானோ?' இப்படி என்னை நமக்கு ஏது உரிமை? என்று எண்ணியவராய், "யாரடா அங்கே?" என்று அழைத்தார் வைரக்கண்ணு. "தம்பி பிரித்துக் கொண்டு போக விரும்புகிறது. அதன் பங்கை அதற்குக் கொடுத்துவிடு!" என்றார். அடுத்தநிமிஷமே ஒரு புது நயா பைசா நாணயம் ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்தான் அவரது பையன்.

"என்ன அண்ணா இது? உங்களுக்கு இருக்கும் சொத்தில் தம்பிக்கு இவ்வளவுதானா பங்கு? துளிக்கூட நியாயமாக நடந்துகொள்ள வில்லையே அண்ணா நீங்கள்!" என்றான் வாலிபன்.

"இதோ பார், தம்பி! என்னையும் பிற அண்ணன்மார்களைப் போல் எண்ணாதே. தம்பிகளின் வயிற்றில் அடித்து நான் வாழ விரும்பவில்லை. அதோடு இதோ இருக்கும் என் மகன் கணக்கிலே புலி. உனக்குப் பாகம் பிரித்துக் கொடுக்கும் விஷயத்தில் துளிக்கூடத் தவறியிருக்க மாட்டான்!" என்றார் வைரக்கண்ணு.

"ஆமாம், சித்தப்பா!" என்றான் பையன் சொந்தம் கொண்டாடியவாறு.

வாலிபனுக்கு ஒரே வியப்பு.

பையன் தொடர்ந்தான்: "உலகத்தில் உள்ள மாந்தர்கள் அனைவரும் அப்பாவுக்குச் சகோதரர்கள் என்றால் அப்பா அவர்கள் எல்லோருக்கும் பாகம் பிரித்துக் கொடுக்க வேண்டும் அல்லவா? அப்பாவுக்கு இருக்கும் சொத்தையும், அவருக்கிருக்கும் கோடானு கோடி தம்பிகளையும் கணக்கிட்டுப் பார்த்தேன். ஆளுக்கு ஒரு நயா பைசாவுக்குக் குறைச்சலாகத்தான் வருகிறது. இன்று நீங்கள் பாகம் பிரித்துக் கொண்டு போகிறீர்கள். நாளைக்கே மற்றவர்களும் வரக்கூடும். அவர்களுக்கெல்லாம் ஆளுக்கு ஒரு நயா பைசா என்று கொடுத்தால் அப்பா கடனாளியாகத்தான் போக வேண்டும். நீங்கள் முன்னால் வந்தீர்களோ, பிழைத்தீர்களோ! உங்களுக்கு விண்ணாமல் குறையாமல் ஒரு நயாபைசா கிடைத்து விட்டது! மற்றவர்களுக்கு அதுகூடக் கிடைக்காது. இரண்டு பேர், மூன்று பேராக ஒருநயாபைசாவை எடுத்துக் கொண்டு போங்கள் என்றுதான் சொல்ல வேண்டியிருக்கும்!"

வைரக் கண்ணுவின் மகன் சொன்னதைக்கேட்ட பின், வாய் திறக்காமல் வெளியேறினான், உறவு கொண்டாடிக் கொண்டு பாகம் கேட்க வந்த வாலிபன்.

—குறும்பன்

# பத்தினிக் கோட்டம்

ஜெகசிற்பியன்

## அத்தியாயம் 35

## அழைத்தது ஏன்?

அந்த அதிசயத்தை நினைக்க நினைக்க அவன் மனம் வியப்பால் வியர்த்துக் கொட்டியது.

'என்ன விந்தையான நிகழ்ச்சி! எத்தனை விநோதமான சம்பவ மாற்றம்! நம்மைக் கொண்டு நடைபெறும் நிகழ்ச்சிகள் அனைத்துக்கும் நாமே பொறுப்பாளி என்றும், அவற்றை நாம்தான் எண்ணிக் கணித்துச் செயல்பட வைக்கிறோம் என்றும் நினைப்பது எவ்வளவு பேதைமை! உண்மையில் நமக்கும், நம்மால் நிகழ்த்தப் பெறும் நிகழ்ச்சிகளுக்கும் எவ்விதத் தொடர்பும் இருப்பதே இல்லை. நிகழும் நிகழ்ச்சிகளில் சில, நம் நினைப்பையும் செயலையும் ஒட்டி அமைவதைக் கொண்டு அவற்றை நாமே நிகழ்த்துவதாக நினைத்துக் கொள்கிறோம்; ஆனால் நம் நினைப்புக்குப் புறம்பாகவும் செயலுக்கு மாறாகவும் சில நிகழ்ச்சிகள் நிகழ்வது ஏன் என்ற கேள்வி எழும்போதுதான், நாம் நினைத்தபடியும் செய்தபடியும் சரியாக அமைந்த நிகழ்ச்சிகளெல்லாம் ஏதோ ஓர் அசம்பாவித ஒற்றுமையால் நிகழ்ந்தவை என்பது புலனாகிறது. நினைப்பின் ஆதிக்கத்துக்குட்பட்டே நிகழ்ச்சிகள் நிகழ்வதாயின் அவற்றில் எத்தகைய மாற்றமும் ஏற்படக் காரணம் இல்லையல்லவா?

ஒன்றன்பின் ஒன்றாக நிகழ்ச்சிகள் தாமாகவே உருவாகிச் செயல்பட்டுக் கொண்டு போகின்றன. அப்படிச் செயல்படும் நிகழ்ச்சிகளின் முன்னறிவிப்பாக ஏதோ ஒருவித உணர்வு மனத்தில் பிரதிபலிக்கும்போது, நம் நினைப்பும் செயலும் அந்த நிகழ்ச்சிகளுடன் தொடர்பு கொண்டு நாம் நினைத்தபடியும் செய்தபடியும் அவை நிகழ்ந்து முடிகின்றன. அந்தத் தொடர்புக்குரிய உணர்வு மனத்தைத் தீண்டாமற் போய் விட்டாலோ நம் நினைப்பும் செயலும் வேறு, நிகழும் நிகழ்ச்சிகள் வேறு என்றாகி விடுகின்றன. நிகழ்ச்சிகளின் முன்னறிவிப்பான அந்த 'ஏதோ ஒருவித உணர்வு' என்பது என்ன? அது ஏன் நம் மனத்தில் சில நிகழ்ச்சிகளை மட்டும் பிரதிபலிக்கிறது? சில நிகழ்ச்சிகளைப் பிரதிபலித்துக் காட்டாமலே போய் விடுகிறது?....' —

தான் மேற்கொண்டு வந்திருக்கும் இலட்சியப் பணியின் ஆவேசந் தூண்டுதலால், தன் மனத்தில் மலர்ந்த இனிய காதலையும் கருக்கிக் கொள்ளத் துணிந்து அதன் காரணகர்த்தனை பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனைக் காட்டிக் கொடுத்தே ஆக வேண்டுமென்ற தீர்மானத்துடன், அவனது உருவ ஓவியத்தைச் சளுக்கியத் தளபதி வில்வேலனிடம் சேர்ப்பித்த பிறகு, அதிலே அவனையுமறியாமல் அவனுடைய கண்ணீரால் நிகழ்ந்து விட்ட



அவ்விந்தையான மாற்றத்தை எண்ணித் தான் இது போன்ற கனவாதம், நிகழ்ச்சி வாதமெல்லாம் நிகழ்ந்தி நெஞ்சம் வியர்த்து நீர்த்துக் கொண்டிருந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி.

'அந்த ஓவியத்தில் உள்ளபடி பல்லவ மன்னர் பரமேசுவரவர்மர் ஒரு கண்ணை இழந்த குருடர் என்றே தளபதி வில்வேலி தீர்மானித்து, அம் மாதிரி உருவத் தோற்றத்துடன் யார் இருந்தாலும் உடனே பிடித்துக் கொண்டு வந்து சேர்க்குமாறு தம் ஒற்றர் படைத் தலைவனிடம் கட்டளை யிட்டு அனுப்பியிருக்கிறார். இப்போது நாடெங்கிலும் அவருடைய அந்தக் கட்டளை மின்னல் வேகத்தில் செயல் படத் தொடங்கி விட்டிருக்கும். என் கண்ணீரால் அவ்வோவியத்தின் விழிப் பகுதி கரைந்து போய் அதன் முகச் சாயல் மாறி விட்டதென்னவோ உண்மைதான். என்றாலும், எமகாதகர் களான சளுக்கிய ஒற்றர்கள் அந்தச் சித்திரத்திலுள்ள மற்ற அவயவ அமைப்புக்களைக் கொண்டு அவரைக் கண்டு பிடித்துவிட்டால் என்ன செய்வது?'

அலட்சிய மிடுக்குடன் முகத்தைச் சுளித்த அவள், தலையை மேலும் கீழுமாக ஆட்டிக் கொண்டாள்.

'அப்படித்தான் அவர் அகப்பட்டுக் கொள்ளட்டுமே! அதைப் பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்? அவர் யார்? நான் யார்? அவர் என் குல வைரி! எங்கள் தந்தையர் நாட்டுக்குச் சொல்லொணா அவமான அழிவுகளை ஏற்படுத்தியவர்களின் வழித் தோன்றல்! அதற்கெல்லாம் சேர்த்து அவரைப் பழி வாங்க வேண்டுமென என் பெரிய தந்தையார் துடிப்பது நியாயம் தானே? அவரது நியாயமான அந்தப் பழி வாங்கல் நடவடிக்கைக்கு நான் ஏன் தடங்கலாக இருக்க வேண்டும்?'

அவள் மனம் திடீரென்று சுளுக்கிக் கொண்டது. அதன் வேதனையைத் தாளமாட்டாமல் தன் மென்னுடலை முறுக்கி நெளிந்தாள்.

'என்ன பயங்கரமான எண்ணங்கள் என் மனத்திலே தோன்றுகின்றன! இந்தப் பல்லவ நாடு எங்கள் சளுக்கிய நாட்டுக்குச் செய்த இழிவு அழிவுகளுக்கெல்லாம் தான் இப்போது வேண்டிய அளவு பழி வாங்கப்பட்டு விட்டதே! இன்னும் ஏன் பழிவெறி கொண்டு அலைய வேண்டும்? எவனோ செய்த தீங்குகளுக்கு யாரையோ தண்டிக்க முனைவது பச்சைப் பாதகச் செயல் அல்லவா? நாட்டுக்கு நாடு பகையும் பூசலும் பழி வாங்க வேண்டுமென்ற ஆவேச உணர்ச்சியும் கொள்வது நியாயமாக இருக்கலாம்; ஆனால் அத்தகைய உணர்ச்சிகளைத் தனிமனிதனிடம் காட்டுவது அரசியல் அநாகரிகம் அல்லவா? அதிலும், ஒரு பாவமும் அறியாத சத்வகுண சீலராகத் தோன்றும் இன்றையப் பல்லவ மன்னரைப் பழி வாங்க முயல்வது கொடுமையிலும் கொடுமை அல்லவா? இப்படிப்பட்ட ஒரு கொடும் பாபச் செயலுக்கு. 'அஹிம்சா பரமோ தர்ம:' என்னும் கொள்கையைத் தாரக மந்திரமாகக் கொண்ட சமண சமயத்தைச் சார்ந்தவளான நான், உதவியும் ஊக்கமும் தர நினைப்பது மாபெரும் தவறு அல்லவா?'

தன் உள் மனத்தின் உள்ளிருந்து பீறிட்டெழுந்த இந்தக் கேள்விகளை மறுப்பவள்போல் விறைப்பாக நிமிர்ந்து உட்கார்ந்தாள் அவள்.

'மிகப் பெரிய நன்மையான காரியம் ஒன்றைச் சாதிக்க, மிகச் சிறிய தீமையான செயல் ஒன்றைச் செய்வது தவறாகாது! என்னுடைய மகத்தான இலட்சியம் நிறைவேற வேண்டுமானால் பரமேசுவரவர்மர் பிடிபட்டே ஆக வேண்டும்! இந்த உறுதியோடும், துணிவோடும் அவ்வோவியத்தை எடுத்து வந்த நான், கடைசி நேரத்தில் ஏன் அப்படி மனம் பேதலித்துப் போனேன்? ஓவியத்தின் விழிப்பகுதி அழிந்ததற்குரிய காரணத்தையும், அத்தியந்தகாமன் என்ற பெயரோடு வந்தவர் தாம் பல்லவ மன்னர் என்னும் உண்மையையும் அப்போதே நான் வில்வேலியிடம் சொல்லாமற் போய் விட்டேனே! சளுக்கிய ஒற்றர்களின் கையிலே அவர் சிக்கிக் கொள்ள நேர்ந்து, அவரது கண்ணுக்கு எவ்வித ஊனமும் இல்லை என்ற விவரமும் வெளிப்பட்டால், உடனே சளுக்கியத் தளபதியின் சந்தேகம் என் மீதல்லவா திரும்பி விடும்? என்னையறியாமலே நான் எவ்வளவு பெரிய இக்கட்டில் சிக்கிக்கொண்டு விட்டேன்!'

இதனுடன் எழுந்து நின்ற உத்தமசீலி, இப்போதே அந்த விவரங்களை வில்வேலியிடம் போய்த் தெரிவித்து விடவேண்டும் என்று தீர்மானித்தவளாய், அங்கிருந்து பல்லவபுரம் அரண்மனைக்குப் போகத் தன் சிவிகையைக் கொண்டு வரும்படி பணியாட்களிடம் கட்டளையிடும் பொருட்டுத் திரும்பியவள் ஏனோ ஸ்தம்பித்து நின்றாள்.

'அதோ அந்த ஒற்றைத் தூண் குடைமண்டபத்தருகிலே நேற்று நான் பல்லவ மன்னரிடம் என்ன சொன்னேன்? என் இதயச் சிறையில் அவரை அடைத்து வைத்துக் கொண்டிருப்பதாகச் சொன்ன

சொற்களின் ஈரம்கூட இன்னும் எனது உதடுகளிலிருந்து உலரவில்லையே! அதற்குள் அவரை எதிரியிடம் காட்டிக் கொடுக்கவா போகிறேன்?"

நெஞ்சில் அம்பு தைத்தாற் போல் துடித்துப் பதறிய அவள், தன் முகத்தை இரு கைகளாலும் பொத்திக் கொண்டு மேன்மாடப் படிகளில் ஏறி ஓடினாள்.

''இளவரசியாரின் சமூகத்துக்கு...''

பாதிப் படி வரையில் ஏறிவிட்ட உத்தமசீலி சட்டென்று திரும்பினாள். அங்கே, சளுக்கிய வீரனொருவன் வந்து பணிவுடன் வணங்கி நின்று கொண்டிருப்பதைப் பார்த்ததும் ஏதோ ஒரு விஷயத்தை நினைவு கூர்ந்தவள்போல் அதரங்களைக் குவித்துப் புருவங்களை மேலுயர்த்தினாள்.

''இளவரசியாரின் கட்டளைப்படி ஆலம்பாக்கத்திலிருந்து அவ்விரு இடையப் பெண்களையும் அழைத்துக் கொண்டு வந்திருக்கிறோம்!''

இதைக் கேட்டு உள்ளூறப் பரபரப்படைந்த உத்தமசீலி, சித்திரகூடத்தின் வாயிற்பக்கம் தன் பார்வையைச் செலுத்தினாள். அதே சமயம், மூன்று சளுக்கிய வீரர்கள் பின் தொடர, சோழ இளவரசி இளங்கோப்பிச்சியும், மூதாட்டி அநந்தமதியும் பயப்பிராந்தியோடு உள்ளே வந்தனர்.

ஒருகணம் ஏதோ யோசித்த உத்தமசீலி, சளுக்கிய வீரர்களைப் பார்த்து, ''சரி; நீங்கள் போகலாம்'' என்று கட்டளையிடுங் குரலில் கூறினாள். உடனே அந்நான்கு வீரர்களும் அங்கிருந்து வெளியேறினர்.

விடியற்சாம நேரத்தில் வீட்டின் கதவைத் தட்டி, 'வேங்கி இளவரசியார் உத்தரவுக்கிணங்கப் பல்லவபுரத்துக்கு வர வேண்டும்' என்று இந்நான்கு வீரர்களும் சொன்னதைக் கேட்டுப் பெரிதும் கலவரம் அடைந்தவர்களாய் அங்கு வந்து சேர்ந்திருந்த இளங்கோப்பிச்சியும் அநந்தமதியும், இனி என்ன நடக்கப் போகிறதோ என்ற திகிலுடன் வேர்த்து விறுவிறுத்து நின்று கொண்டிருந்தனர்.

ஒவ்வொரு படியாக நிதானத்துடன் இறங்கி வந்த உத்தமசீலி புன்முறுவலோடு தலையைச் சாய்த்து, ''அநந்தமதி அம்மையார் நலம்தானே?'' என்றாள் அன்பும் பரிவுமான குரலில்.

முகம்வெளிறி நின்ற அநந்தமதி, ''நன்னலமே அம்மணி!'' என்று குழறினாள்.

உத்தமசீலியின் பார்வை அநந்தமதியின் பக்கமே இருந்தது. இளங்கோப்பிச்சியை ஏனோ அவள் பார்க்கவில்லை. ''சேதியக் கலைஞர் பரவாதிமல்லரும் நலம்தானே?'' என்று மீண்டும் அதே புன்னகையுடன் அமைதியாக வினவினாள் அவள்.

''அவர் நலமாகவே இருப்பார் என்று நம்புகிறேன் அம்மணி! ஏனென்றால், ஒரு வாரத்துக்குமுன் ஓர் அவசர காரியமாக ஆலம்பாக்கத்துக்கு வந்த நான் இன்னமும் பெருவளநல்லூருக்குத் திரும்பிப் போகவில்லை...''

''அப்படியா? ஆமாம்; உங்களுக்கு எத்தனையோ அலுவல்கள். அவற்றுக்கிடையே சேதியக் கலைஞரின் இல்லத்திலும் பணியாற்றுவதென்பது மிகவும் சிரமம்தான்.''

நிஜமாகவே அநுதாபப் படுகிறவள் போல் இப்படிச் சொன்னாள் உத்தமசீலி. இதைக் கேட்ட அநந்தமதியோ உள்ளூறக் கலக்கமடைந்தாள்.

''அது சரி; நேற்று நீங்கள் இந்த இலவந்திகைப் பள்ளிக்கு வந்து, என்னைப் பார்க்காமலே போய் விட்டீர்களே, ஏன்?''—இதமான குறும்புக் குரலில் இவ்வாறு கேட்டாள் உத்தமசீலி. அதிர்ந்து நிமிர்ந்த அநந்தமதி, திக்கித் திணறிய வண்ணம் ஏதோ சொல்ல வாய் திறந்தாள். உண்மைக்குப் புறம்பாக அவள் எதையேனும் சொல்லித் தன் கௌரவ நோக்கிலிருந்து தாழ்ந்து போய்விடுவாளோ என்று அஞ்சியவள் போல் சட்டென்று குறுக்கிட்ட உத்தமசீலி, ''நீங்கள் என்னை மறந்தாலும், நான் உங்களை மறக்க முடியாது. சேதியக் கலைஞரின் இல்லத்திலே நீங்கள் எனக்குச் சமைத்துப் படைத்த உணவின் இனிய சுவை இன்னமும் என் நாவில் இருந்து கொண்டே இருக்கிறது'' என்றாள் புன்சிரிப்புடன்.

அநந்தமதியின் முகம் வெட்கத்தால் வறண்டது. கலை படிந்த ஊமத்தை மலர்ப் பொதியில் புரண்டு எழுந்தவளைப்போல் அப்படியும் இப்படியுமாக நெளிந்தாள் அவள்.

அவளுடைய பரிதாப நிலையைக் கண்டு மனம் கசிந்தவளாய்த் தன் பார்வையை வேறு பக்கம் திருப்பிய உத்தமசீலி, அங்கு இவ்வளவு நேரமாக அடித்து வைத்த சிலைபோல் நின்று கொண்டிருந்த இளங்கோப்பிச்சியை அப்போதுதான் பார்த்த மாதிரி ஆச்சரியத்துடன் கண்களை அகல விரித்தவாறு அவளருகில் நெருங்கினாள். பிறகு மெல்லச் சிரித்துக் கொண்டே அவளது வெண்ணிறத் தோள்களைத் தன் இரு கரங்களாலும் இதமாகப் பற்றி முகத்துக்கு நேரே முகம் வைத்துக் கொண்டு அவளைக் கூர்ந்து நோக்கினாள்.

இளங்கோப்பிச்சியோ எவ்வித சலனமுமின்றிப் பனிப் பதுமையாக உறைந்து நின்று கொண்டிருந்தாள்.




விசாலாட்சி பிலிம்ஸ்
அளிக்கும்

# சுமைதாங்கி

திரைக்கதை, வசனம்
டைரக்ஷன்.......... ஸ்ரீதர்

ஒளிப்பதிவு: வின்சென்ட், இசை: விஸ்வநாதன்-ராமமூர்த்தி, பாடல்: கண்ணதாசன்...
எடிட்டிங்: N. M. சங்கர், கலை: அழகப்பன், மூலக்கதை: ரா.கி. ரங்கராஜன்........
ஸ்டூடியோ: விஜயா வாஹினி.......

தயாரிப்பு: கோவை செழியன் B.A.

ARUNA

"ஆலம்பாக்கத்திலிருந்து பல்லவபுரத்துக்கு நடத்தி அழைத்து வரும்படி சொல்லி விட்டேனே என்று சோழ இளவரசிக்கு என்மீது மிகவும் கோபம் போலும்! இல்லையானால், இங்கு வந்து இவ்வளவு நேரமாகியும் என்னை ஏறெடுத்துக் கூடப் பார்க்காமல், தலை குனிந்து கொண்டே இருப்பாளா?"

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டு அதிர்ச்சி அடைந்தாள். அவளது பூவுடல் நிலை கொள்ளாமல் பதறித் துடித்தது.

கலகலவெனச் சிரித்த உத்தமசீலி சட்டென்று அநந்தமதியின் பக்கம் திரும்பி, "நீங்களே சொல்லுங்கள் அம்மா! இடையப் பெண் கோலத்திலிருக்கும் இவளை அழைத்து வருவதற்காக நான் சிவிகையை அனுப்பினால் இங்குள்ளவர்கள் சிரிக்க மாட்டார்களா? சிரிப்புக்கிடமாவது ஒருபுறமிருந்தாலும் அது இவளுக்கு ஆபத்தாகவும் முடியலாம் அல்லவா?" என்று குறும்பாகக் கண்களைச் சிமிட்டியபடி கூறினாள்.

குளிர்க் காய்ச்சல் கண்டவளைப்போல் நடுங்கிக் கொண்டிருந்த அநந்தமதியைப் பார்ப்பதற்கே மிகவும் பரிதாபமாக இருந்தது.

"கவலைப்படாதே சகோதரி! வா, இப்படி வந்து உட்கார்!" என்று ஆதரவுடன் கூறிக்கொண்டே இளங்கோப்பிச்சியை அணைத்து அழைத்துப் போய் ஓர் ஆசனத்தில் அமர்த்தித் தானும் அவளருகில் அமர்ந்தாள் உத்தமசீலி.

இளங்கோப்பிச்சிக்குத் தன்னை நிதானப் படுத்திக் கொள்ளவே முடியவில்லை. மிரட்சியுடன் சுற்று முற்றும் பார்த்து விழித்தாள். 'இது என்ன கபட நாடகம்? எந்த இடியைத் தூக்கிப் போட இவள் இப்படியெல்லாம் சாகசித்து நடிக்கிறாள்? காணாமற் போன தன் பட்டோலை விஷயமாய் என்னிடம் விசாரிக்கவே இங்கு அழைத்திருக்கிறாள் என்று நான் எண்ணி வந்ததற்கு மாறாக, என்னைப் பற்றிய எல்லா இரகசியங்களையும் தெரிந்து வைத்துக் கொண்டு பேசுகிறாளே! இப்படி நடக்கும் என்று தெரிந்திருந்தால், நேற்றுக் காலையே சம்புவராயனுடன் பழையாறைக்குப் போய் விட்டிருப்பேனே? அப்படிப் போகாதது எவ்வளவு பெரிய தவறாகி விட்டது! நானும் அநந்தமதியும் இங்கு அகப்பட்டுக் கொண்டிருப்பது போல் பரமேசுவர வர்மரும், கோவிந்த வர்மரும் எதிரிகளிடத்தே சிக்கி விட்டிருப்பார்களோ? அந்த விவரத்தை அறிந்து கொண்டுதான் இவள் இப்படிப் பேசுகிறாளோ?' — அவள் மனம் ஒரேயடியாகக் குழம்பித் தவித்தது.

ஏதோ சிந்தனையில் மௌனமாக உட்கார்ந்திருந்த உத்தமசீலி விருட்டென்று எழுந்து சற்றுத் தொலைவில் போய் நின்றுகொண்டு இளங்கோப்பிச்சியைக் கூர்ந்து நோக்கியவாறு அமைதியான குரலில் கூறினாள்: "சோழ இளவரசி! உன்னைப் பற்றிய எல்லா விஷயங்களும் எனக்குத் தெரியும். நீ இப்போது தங்கியுள்ள ஆலம்பாக்கம் இல்லத்துக்கு நேற்றிரவு யார் வந்தது என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் அதைப் பற்றியெல்லாம் நான் இப்போது விசாரிக்கப் போவதில்லை. உன்னிடமிருந்து ஒரு சிறு விஷயம் எனக்குத் தெரிய வேண்டும். அதற்காகவே உன்னை இங்கு வரவழைத்திருக்கிறேன்."

இமைகளை அசைக்கவும் சக்தியற்றுப் போன இளங்கோப்பிச்சி அவளையே நேரிட்டு நோக்கினாள்.

"ஆமாம், சகோதரி! அன்றொரு நாள் நீ எனக்கு இளநீர் கொண்டு வந்து கொடுத்தபோது, என்னுடைய பட்டோலை ஒன்றை இடுப்பில் செருகி வைத்திருந்தாயே, அது உனக்கு யாரால், எப்படிக் கிடைத்தது?"

இளங்கோப்பிச்சி மௌனமாக இருந்தாள்.

"சொல்ல மாட்டாயா? சரி; நானே அதை ஊகித்துச் சொல்கிறேன். உன்னுடைய முயற்சியால் பல்லவபுரம் கோட்டைச் சிறையிலிருந்து தப்பி வந்த கோவிந்த வர்மரே அந்த ஓலையை என் சிவிகையிலிருந்து கவர்ந்து வந்து உன்னிடம் கொடுத்தார். அப்படித்தானே?"

சோழ இளவரசியின் உடல் கிடுகிடுவென்று நடுங்கியது.

"சரி; அதைக்கூட நீ சொல்ல வேண்டாம். ஆனால், அந்த ஓலை உன் கைக்கு வந்த காரணத்தை மட்டும் சொல்லியே ஆக வேண்டும். நான் தெரிந்துகொள்ள விரும்புவது அது ஒன்றுதான்."

இப்போதும் வாயை இறுகமூடிக் கொண்டிருந்தாள் இளவரசி இளங்கோப்பிச்சி.

"உன்னுடையவும், உங்களுடையவும் நன்மைக்காகவே கேட்கிறேன்; ஒளிக்காமல் சொல்லிவிடு!"

பதில் இல்லை.

"நல்லது. இனி உன் காதலர் கோவிந்த வர்மரையோ, அவரது சகோதரர் பரமேசுவர வர்மரையோ இந்த ஜன்மத்தில் பார்க்க முடியாது என்ற தீர்மானத்துடன் நீ இங்கிருந்து போகலாம்."

மேன் மாடத்துக்குச் செல்ல வேகமாகத் திரும்பினாள் உத்தமசீலி. சுட்டியால் குத்தித் தூக்கி யெறியப்பட்டவன்போல் பதறித் துடித்து எழுந்த இளங்கோப்பிச்சி, ''சற்று நில்லுங்கள், இளவரசி! இதோ, அந்தக் காரணத்தைக் கூறிவிடுகிறேன்: உங்களுடைய பட்டோலையைக்கொண்டு, சிறைப்பட்டிருக்கும் பரமேசுவரவர்மரின் அன்னையார் காடவன்மா தேவியை மீட்டுவிட வேண்டும் என்பதற்காகப் பல்லவ இளவரசர் ஏதோ ஒரு தந்திரத் திட்டம் போட்டிருந்தார். அதன் பொருட்டே அவர் அவ்வோலையை என்னிடம் கொண்டு வந்து கொடுத்தார். ஆனால், அவருடைய திட்டம் என்ன என்பது எனக்குத் தெரியாது. அதை அவர் என்னிடம் சொல்லவும் இல்லை'' என்று துக்கம் தொண்டையை அடைக்கக் குழறினாள்.

### அத்தியாயம் முப்பத்தாறு

# இரண ரசிகன் விஜயம்

கடந்த இரண்டு நாட்களாகப் பரபரப்பும் சுறுசுறுப்புமாக விளங்கிய அந்த இலவந்திகைப் பள்ளி இன்றைய பிற்பகலுக்குப் பின் ஆழ்ந்த அமைதியில் புழுக்கமிட்டுக் காணப்பட்டது. இதற்கு முன் அங்கு நிலவியிருக்க முடியாத பயங்கர அமைதியாகவும் அது தோன்றியது. சுழற்றி விட்ட பம்பரமாகச் சுழன்று கொண்டிருந்த பணியாட்கள் இப்போது எங்கு போய் முடங்கினர் என்றே தெரியவில்லை. சளுக்கியக் காவல் வீரர்களின் கண்காணிப்பு நடமாட்டம்கூட வெகுவாகக் குறைந்து விட்டிருந்தது. அங்கு மிங்குமாக ஓரிரு வீரர்களே சோம்பலுடன் உலாவிக் கொண்டிருந்தனர். முன்பு ஏற்பட்டிருந்த சுறுசுறுப்புத் தீவிரத்துக்குக் காரணம் புரியாதது போலவே, இப்போதைய அதன் உயிரற்ற அமைதிக்கும் காரணம் புலனாகவில்லை.

இதை யெல்லாம் கண்டும் காணாதவளாய், அந்தப் பள்ளி மாளிகையின் மிகப் பெரிய நந்தவனத்துப் பூம்பாதை யொன்றில், சொர்க்க வாழ்க்கையைப் பறி கொடுத்துவிட்டு வந்த தேவதை போல் மெள்ள உலாவிக் கொண்டிருந்தாள் உத்தமசீலி.

அவளுடைய பட்டோலையைச் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி வைத்திருந்ததற்கான காரணத்தைக் கேட்டறிந்த பின், அதற்கு ஒன்றுமே பதில் சொல்லாமல் அவளையும் அநந்தமதியையும் போகுமாறு கூறிவிட்டு நெடுநேரம் சிந்தனையில் ஆழ்ந்து கிடந்த அவள், அந்தச் சிந்தனை வேக்காட்டிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளவே இந்த நந்தவனத்துப் பக்கம் நடமாட வந்திருந்தாள். ஆனால், எதை உத்தேசித்து இங்கு வந்தாளோ அதை அவளால் எள்ளளவும் பெற முடியவில்லை. நலிந்து மெலிந்த அவள் மனத்தை அங்கே நிலவிய இறுக்கமான அமைதியும் அதன் சோம்பலான இருண்ட சூழ்நிலையும் மேலும் அலைத்துக் குலைக்கவே உதவின.

தன் தந்தையின் கைச்சாத்து உள்ள அந்தப் பட்டோலையைக் கொண்டு தன்னுடைய இலட்சிய யாத்திரையைச் சீர்குலைக்க வேண்டுமென்ற ஏதோ ஓர் சதித் திட்டத்துடன்தான் சோழ இளவரசி அதைத் தன் வசம் வைத்திருந்திருப்பாள் என்றும், அதற்கு அந்த மூதாட்டி அநந்தமதியும் உதவி செய்பவளாய் இருப்பாள் என்றும் எண்ணியே அவ்விருவரையும் தன் இருப்பிடத்துக்கு வரச் செய்து விசாரித்தாள் உத்தமசீலி. ஆனால், பல்லவ ராணி காடவன்மாதேவியைச் சிறையிலிருந்து மீட்கும் பொருட்டே அவ்வோலையைத் தான் வைத்திருந்ததாகச் சோழ இளவரசி சொன்னதைக் கேட்டதும் அவளுக்குச் சப்பென்றாகிவிட்டது. தன் இலட்சிய விஜயத்துக்குச் சம்பந்தப்படாத அவர்களின் சதித் திட்ட முயற்சியைத் தான் பொருட்படுத்த வேண்டியதில்லை என்ற முடிவோடு அவர்களை நேசபாவத்துடன் அனுப்பி வைத்து விட்டாள் அவள்.



அதோடு அந்த விஷயம் தீர்ந்து போன மாதிரிதானே? அப்புறம் ஏன் அதைப் பற்றி எண்ணித் தன் மனத்தை அவள் குழப்பிக்கொள்ள வேண்டும்? அதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது.

சோழ இளவரசிக்கும், அநந்தமதிக்கும் விடை கொடுத்து அனுப்பியபோது அவர்களிடம் ஒரு விஷயத்தைச் சொல்ல அவள் பெரிதும் விரும்பினாள். அதாவது, பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன் வரைந்து கொடுத்த ஓவியத்தைக் கொண்டு அவனைத் தேடிப் பிடித்துவிடச் சளுக்கிய ஒற்றர்கள் இப்போது நாடெங்



கிலும் விரைந்து சென்றிருக்கிறார்கள் என்னும் விஷயத்தை அநந்தமதியிடமோ, சோழ இளவரசியிடமோ சொல்லி அவர்களை எச்சரித்து அனுப்ப வேண்டும் என்பதுதான் அது. ஆனால், கடைசி வினாடிவரையில் அந்த விஷயத்தை அவர்களிடம் அவளால் சொல்லவே முடியவில்லை. மனம் துணியும் போது வாய் அதைச் சொல்ல மறுத்தது; வாய் துணியும் போது மனம் அதற்குப் பூட்டுப் போட்டது. இப்படி வாய்க்கும் மனத்துக்குமாக ஒரு பெரிய போராட்டமே நடத்தி இறுதியில் அவ்விஷயத்தை அவர்களிடம் சொல்லாமலே இருந்துவிட்டாள்.

அவர்களும் போய் விட்டார்கள். அதன் பிறகுதான், 'ஐயோ! அதைச் சொல்லாமல் அவர்களை அனுப்பி விட்டேனே' என்று அவள் வாயும் துடித்தது. மனமும் வெடித்தது. புழுவாக நெளிந்தாள். தனியாய்த் தவித்தாள். குமுறிக் குமுறி அழுதாள். பிரமை பிடித்தவள்போல் நெடு நேரம் உட்கார்ந்திருந்து விட்டுக் கடைசியில் இதோ, இந்த நந்தவனத்தில் உலாவ வந்திருக்கிறாள்.

'பனீர்! பனீர்! பனீர்!'

தென்றலில் மிதந்து செல்லும் பூந்துகில் போல் நடந்து கொண்டிருந்த உத்தமசீலி, இந்தப்

பயங்கரச் சாட்டையொலி கேட்டுத் திடுக்கிட்டு நின்றான்.

மீண்டும் அதே சாட்டை சொடுக்கும் பளீரொலி!

அவள் பரபரப்புடன் திரும்பினாள். அங்கே — அந்த நந்தவனத்து வேலியோரம் — ஒரு கோரமான நிகழ்ச்சி வெகு குரூராவேசமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது.

ஆமாம்; அவனுடைய சிவிகை தூக்கிகளில் ஒருவனான நாகோதரன் என்பான் முட்கள் நிறைந்த வேல மரமொன்றில் இறுக்கிப் பிணைத்துக் கட்டப்பட்டிருந்தான். அத்துடன் அன்றொரு நாள் சேதியக் கலைஞர் பரவாதி மல்லரின் தோட்டத்திலிருந்து அவனே தூக்கியெடுத்து வந்த தாமரைப்பூ வடிவமான மர ஆசனத்தையும் தன் தலையில் சுமந்து கொண்டிருந்தான். அவனுக்கு முன்னும் பின்னுமாக மறலியின் தூதுவர்கள்போல் நின்றுகொண்டிருந்த சளுக்கிய வீரர்கள் இருவர் நீண்ட சவுக்கைச் சுழற்றிச் சுழற்றி அவனை மூர்க்காவேசமாகச் சாடிக் கொண்டிருந்தனர்!...

நெஞ்சை உலுக்கும் இந்தக் கோரக் காட்சியைக் கண்டு நடுங்கித் துடித்து விட்டாள் உத்தமசீலி. ஒரு கணம் அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. பிறகு சடாரென்று அவ்விடத்தை நோக்கிப் பாய்ந்தோடினாள்.

ஆந்திர இளவரசி அங்கு வருவதைப் பார்த்த அவ்விரு சளுக்கிய வீரர்களும் சாட்டைகளைப் போட்டுவிட்டுச் செடி கொடிகளிடையே புகுந்து மறைந்தனர்.

மேல் மூச்சுப் பறிய அந்த வேல மரத்தின் அருகில் வந்து நின்றாள் உத்தமசீலி. அவள் வந்ததையும் உணராத நிலையிலே மரத்தோடு மரமாக மூர்ச்சித்துச் சாய்ந்திருந்தான் நாகோதரன். தசைகள் பிய்ந்து தொங்க, நரம்புகள் அறுந்து சுருளச் சர்வாங்கமும் ஒரே குருதிக் களரியாகி விட்டிருந்த அவன், உயிரோடு இருக்கிறானா அல்லது இறந்து விட்டானா என்பதே தெரியவில்லை.

அன்புக் கொள்கையிலும் அஹிம்சைத் தத்துவத்திலும் ஊறி வளர்ந்தவளான உத்தமசீலி இந்தக் கொடுமையான கோரக் காட்சியைக் காணச் சகியாமல் முகத்தைப் பொத்திக் கொண்டு விம்மிப் பொருமியே விட்டாள்.

'யாரால், எதற்காக இவனுக்கு இவ்வளவு பெரிய தண்டனை விதிக்கப்பட்டது?'

சிந்திக்க இது நேரமில்லையென்று தன்னையே கடிந்து கொண்ட அவள், சரேலென விரைந்து போய் நாகோதரனின் உடலைச் சுற்றிப் பிணைத்திருந்த கட்டுக்களை அவிழ்த்தெறிந்தாள். கட்டவிழ்த்து விடப்பட்ட அவன் பேச்சு மூச்சின்றிப் பிணம் போல் அப்படியே சாய்ந்தான்.

உத்தமசீலியின் மென்னுடல் நிலை கொள்ளாமல் நடுநடுங்கியது. தான் ஒரு நாட்டு இளவரசி என்ற எண்ணமே இன்றி, தானும் அந்தச் சிவிகை தூக்கியும் ஒரே தாய் வயிற்றில் பிறந்தவர்கள் என்ற தூய பாசப் பரிவோடு ஒற்றை முழந்தாளிட்டு அமர்ந்து பயப் பிராந்தியுடன் குனிந்து, அவனுக்கு மூச்சு இருக்கிறதா என நாசியில் கை வைத்துப் பார்த்தாள்.

சாவு அவனை இன்னும் நெருங்கவில்லை!

அவசரமாகத் தன் மேலாடைத் துகிலிலிருந்து ஒரு பகுதியைக் கிழித்து எடுத்த அவள், இரத்தச் சேறுகி விட்டிருந்த அவனுடைய முகத்தை இதமாகத் துடைத்துச் சுத்தம் செய்தாள்.

அவன் இலேசாகக் கண் திறந்தான். தன் அருகில் முழந்தாளிட்டிருக்கும் உத்தமசீலியை மிரள மிரளப் பார்த்தான். மறு கணம் அவன் உடலில் ஓர் அசாதாரண நடுக்கம் ஏற்பட்டது. திடீரென்று எழுந்திருக்க முயன்று அப்படியே தரையில் சாய்ந்தான். பிறகு தட்டுத் தடுமாறித் தரையோடு தரையாக நகர்ந்து சற்றுத் தொலைவில் போய் முட்டியிட்டு அமர்ந்து இரு கைகளையும் தலைக்கு மேல் தூக்கிக் குவித்துக் கொண்டு, "இளவரசி! தயை கூர்ந்து என்னை மன்னித்து விடுங்கள் இளவரசி! நான் செய்த தவற்றுக்கு இந்தத் தண்டனையே போதும்! என்னைக் கொல்லாதீர்கள் அம்மணி! கொல்லச் சொல்லாதீர்கள் தாயே!" என்று பரிதாபமாக அலறினான்.

உத்தமசீலியின் மனம் உருகிக் கரைந்தது. "நாகோதரா, பயப்படாதே! நான் உனக்கு எவ்விதத் தீங்கும் செய்ய வரவில்லை. இந்த அநியாயத் தண்டனையிலிருந்து உன்னைக் காப்பாற்றவே வந்திருக்கிறேன். இந்தத் தண்டனையை உனக்கு அளித்தவர் யார்? சளுக்கியத் தளபதி வில்வேலியா?" என்று அடைத்த குரலில் கேட்டாள் ஆந்திர இளவரசி.

'இல்லை' என்று தலையசைத்த அவன் தன்னை மீறிய ஒரு பயபக்தியோடு சுற்று முற்றும் திரும்பிப் பார்த்தான். பிறகு திக்கித் திணறிக் கொண்டே இவ்வாறு கூறினான்: "சற்று முன் சளுக்கிய மாமன்னர் இரணரசிக வல்லபர் விக்கிரமாதித்தரே இங்கு நேரில் வந்து, எனக்கு இந்தத் தண்டனையை வழங்கினார் அம்மணி!" (தொடரும்)

# இரகசியம்

கோமதி சுவாமிநாதன்

சுந்தரராமன் மூக்கைத் தேய்த்து விட்டுக்கொண்டார். இரண்டு சந்தர்ப்பங்களில் தான் அவருடைய வலது உள்ளங்கை அவர் மூக்கின்மீது படையெடுக்கும். ஒன்று அவருக்கு அதீதமான கோபம் வரும்போது; மற்றொன்று அவருடைய மனைவி ஜானகியுடன் பேச வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும்போது. பொதுவாக இந்த இரண்டு சந்தர்ப்பங்களிலுமே அவர் மூக்கு சிவப்பதுதான் மிச்சமாகுமே தவிர அவர் கோபத்தைப் புரிந்து சமாதானம் சொல்லவோ, அவருடன் பேச்சுக் கொடுக்கவோ அவர் மனைவி ஜானகி கண்களிலேயே தென்படமாட்டாள். இப்போது அவருடைய கோபமும் ஜானகிமீதுதான். அவர் பேச விரும்பியதும் ஜானகியுடன்தான். துணிந்து உள்ளே போய் அவளைக் கண்டு பிடித்துச் சண்டை போட வேண்டியதுதான் என்ற முடிவுக்குக் கூட அநேகமாக வந்து விட்டார். அவருடைய அறுபத்தி ஐந்து வருட வாழ்க்கையில் அந்தத் துணிவு இப்போது தான் முதல் தடவையாகத் தோன்றியிருக்கிறது என்றுகூடச் சொல்லலாம். 'அப்பாவி' என்ற அடைமொழி அவரை ஒட்டிக் கொண்டு வெகு நாட்களாகி விட்டன. அவர் உத்தியோகம் பார்த்த நாட்களிலும் அவர் அவருடைய சக ஊழியர்களுக்கும் அதிகாரிகளுக்கும் ஓர் அப்பாவி தான். உத்தியோகத்திலிருந்து ரிட்டயர் ஆகி ஊரோடு வந்து உட்கார்ந்து ஐந்து வருடங்களாகியும் ஊர்க்காரர்களுக்கு இன்னும் அவர் ஓர் அப்பாவிதான்.



''மாமா!'' என்ற மதுரமான குரல் திண்ணையை ஒட்டியிருந்த ஜன்னல் வழியாக வந்தது. திண்ணை ஓரத்தில் அமர்ந்திருந்த சுந்தரராமன் மூக்கின் மேலிருந்த கையைச் சட்டென்று எடுத்து விட்டு ஜன்னல் பக்கம் திரும்பினார். ஜன்னல் கம்பிகளுக்குப் பின்னால் உமாதான் நின்று கொண்டிருந்தாள்.

''காப்பி ஆறிக் கொண்டிருக்கிறதே, மாமா!'' என்று மீண்டும் குரல் கொடுத்தாள் உமா.

''பெஞ்சி மேலேயே இருக்கட்டும் அம்மா! இதோ உள்ளே வருகிறேன்: நீ உன் வேலையைப் பாரு போ!'' என்றார் சுந்தரராமன். அவர் குரலில் அவரை அறியாமலேயே இனிமை பரவி யிருந்தது.

'உமா! அன்று அந்த அயோத்தி ராமன் ஜானகியை அசோக வன அரக்கிகளிடமிருந்து காப்பாற்றி விடுவித்தான். இன்று இந்த அப்பாவி ராமன் உன்னை ஜானகி என்ற அரக்கியிடமிருந்து விடுவிக்க முடியாமல் தவிக்கிறேன்' என்ற வார்த்தைகள் கூடச் சத்தமிழந்து அவர் உதடுகளிலிருந்து வெளிப்பட்டன.

ரேழி பெஞ்சின் மீதிருந்த காப்பியை எடுத்துக் குடித்து விட்டுச் சுந்தரராமன் மீண்டும் திண்ணை விளிம்புக்கு வந்து சிந்தனைகளில் ஈடுபட்டார்;

அவர் கனவு கலைந்தது. ஜன்னலருகே புடவை சலசலக்கும் ஒலி கேட்டது. ஜானகியே நின்று கொண்டிருந்தாள். பழுத்த பழம் என்று சொல்ல முடியாத போதிலும் நன்கு முதிர்ந்த காய். ஐம்பது வயதைத் தாண்டிவிட்டதை அறிவிக்கும் அனுபவ ரேகைகள் அவள் முகத்தில் பதிந்திருந்தன.

"இப்படிப் பிள்ளையாராக உட்கார்ந்திருந்தால் என்ன காரியம் நடக்கும்? வீட்டில் ஒரு சொட்டு எண்ணெய் இல்லை. சொக்கநாதன் செக்கு வரையில் போய் ஒரு வீசை எண்ணெய் வாங்கிக் கொண்டு வாருங்கள்" என்றாள் ஜானகி.

"இந்தா ஜானகி! எண்ணெய் வாங்கப் போவதற்கு முன்னாலே உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே அவசரமாக எழுந்து ரேழிக்கு வந்தார். ஜானகி பிறகு அவரைப் பேச விடவில்லை. "வழக்கம் போல் உமாவைப் பற்றித்தானே ஆரம்பிக்கப் போகிறீர்கள்? எந்தக் காரியத்தை எப்போ செய்யணும் என்று எனக்குத் தெரியும். நீங்கள் நீதியெல்லாம் குறுக்கிட வேண்டாம். சொல்லுகிற காரியத்தைச் செய்து கொண்டு திண்ணையில் 'ராமா கிருஷ்ணா' என்று உட்கார்ந்திருந்தால் போதும்" என்று முகத்தில் அடித்தாற் போல் சொன்னாள்.

சுந்தரராமனின் முகம் தபால் பெட்டியாகச் சிவந்தது. நெற்றி நரம்புகள் புடைத்தன. "அடி பாவி! நீ மனுஷியா, அரக்கியா? சம்பளமில்லாத ஒரு வேலைக்காரி கிடைத்தாளென்று அந்த அபலைப் பெண்ணை இப்படியா வாழவொட்டாமல் அடிப்பாய்? நீ ஒழிந்தால்தான் அவளுக்கு விமோசனம்" என்று கொதித்து எழுந்தார். பிறகு எண்ணெய்ச் செம்பைத் தூக்கிக் கொண்டு கிளம்பினார்.

செம்பு காலியாக இருந்தது போல் அவர் உள்ளம் காலியாக இல்லை. பல திசைகளில் பாய்ந்த எண்ணக் கதிர்கள் இப்போது ஒன்று சேர்ந்து ஒரே திசையில் ஓடின.

சுந்தர ராமனுக்குக் குழந்தைகள் பிறக்கவே யில்லை. குடும்பத்தில் அவரும் அவர் மனைவி ஜானகியும்தான். சாதாரண வரும்படி உள்ள சர்க்கார் குமாஸ்தாவாகத்தான் அவர் பணியாற்றினார். அவர் உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றபோது அறுபது ரூபாய் பென்ஷன் வாங்க ஆரம்பித்தார். ஊரில் ஓர் ஓட்டு வீடு மாத்திரம் இருந்தது. வாடகை மிச்சம்.

பதினைந்து வருஷங்களுக்கு முன்பு அவர் உத்தியோகம் பார்த்த நாளில் ஒரு சமயம் அவருடைய தூரத்து உறவுக்கார அம்மாள் ஒருத்தி ஐந்தாறு வயதுப் பெண்ணுடன் அவர் வீட்டில் சில நாட்கள் தங்கிப் போக வந்தாள். அந்த அம்மாள் கணவனை இழந்தவள். திக்கு இல்லாதவள். எங்கோ உழைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தவள்.

சுந்தரராமன் வீட்டில் சில நாட்கள் தங்கிப் போக வந்தாள். ஆனால் அவளுக்குத் திரும்பிப் போகும் வாய்ப்பே கிட்டவில்லை. வந்த சில நாட்களுக்குள் நோய்வாய்ப்பட்டுக் காலமாகி விட்டாள். அப்போது அந்த அம்மாளின் பெண் உமாவுக்கு நினைவு தெரியாது. "ஜானகி! எனக்கு வேறு யாருமில்லை; உமாவை உன்னிடம் ஒப்படைக்கிறேன். அவள் கழுத்திலிருக்கும் ஆறு பவுன் சங்கிலி தான் அவள் ஆஸ்தி. ஏழையானாலும் யோக்கியமானவனாகப் பார்த்து அவளை ஒப்படைத்துவிடு" என்று சொல்லிக் கண்களை மூடிவிட்டாள் வந்திருந்த அம்மாள்.

சுந்தரராமனும் ஜானகியும் உமாவை ஒரு பாரமாகக் கருதவில்லை. தங்கள் வருவாய்க்கு இயன்றவரையில் படிக்க வைத்தார்கள். உமா தளதளவென்று வளர்ந்து விட்டாள். அவள் கழுத்திலிருந்த சங்கிலி ஜானகியின் கழுத்துக்குத் தாவிவிட்டது. அந்த இடத்தில் ஒரு சாதாரண கறுப்புப் பாசி மணி மாலை இப்போது இருந்தது. அதுவும் அவளுக்குப் பிரத்தியேக அழகைத்தான் கொடுத்தது.

உமா சிறுமியாக இருந்தவரையில் சுந்தரராமனோ ஜானகியோ அவளைப் பற்றிக் கவலைப்படவில்லை. சுந்தரராமன் கவனம் உத்தியோகத்தில் ஈடுபட்டிருந்தது. ஆனால் சுந்தரராமன் ஓய்வு பெற்று வீட்டோடு வந்து உட்காரவும் உமா யுவதியாகப் பரிணமிக்கவும் சரியாக இருந்தது. சுந்தரராமன் கவலைப்பட ஆரம்பித்தார்.

ஜானகி என்னவோ கொஞ்சம் கூட உமாவைப் பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. வீட்டு வேலைகளையெல்லாம் இப்போது உமாதான் செய்தாள். ஜானகி காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்து வேலை வாங்கினாள். உமா ஒரு நாளும் முகம் சிணுங்கவில்லை. ஆனால் சுந்தரராமனின் முகம் மாத்திரம் அடிக்கடி வேதனையால் சுருங்கியது.

சமீப காலமாக ஜானகி எதிலுமே தரித்திர புத்தியைக் காண்பித்தாள். எதிலும் சிக்கனத்தைக் கடைப்பிடிக்க ஆரம்பித்தாள். இது போதாதென்று ஓய்வு கிடைக்கும் பகல் வேளைகளில் உமாவின் உதவியால் அப்பளம் இட்டு வியாபாரம் பண்ணவும் தொடங்கினாள்.

சுந்தர ராமன் யோசித்து யோசித்து மண்டையைக் குடைந்து கொண்டார். ஜானகிக்கு ஏன் இப்படித் திடீர்ப் பணத்தாசை ஏற்பட்டது? பென்ஷனாக வரும் அறுபது ரூபாயைக் கொண்டு அந்தச் சிற்றூரில் மூன்று நபர்கள் வசதியாகவே வாழலாமே! இப்படிப் பணம் சேர்க்கும் ஆசையினால் தானோ அவள் உமா விவாக விஷயத்தில் அக்கறை காட்ட மாட்டேன் என்கிறாள்? இரண்டொரு சந்தர்ப்பங்களில் ஜானகியிடம் பேச ஆரம்பித்தபோது அவள் பளிச்சென்று அவர் வாயை மூடிவிட்டாள்.

முன் இருட்டுக் காலம். கடந்த வாரத்தில் ஒரு நாள் மாலை. கோவில் பிராகாரத்தில் மரத்தடியில் ஏதோ யோசனையாக உட்கார்ந்திருந்த சுந்தரராமன் திடீரென்று நிமிர்ந்து உட்கார்ந்தார். அது உமாவின் குரலேதான். அதற்காக அவர் நிமிர்ந்து உட்காரவில்லை. அவள் குரலுடன் ஒரு வாலிபன் குரலும் கலந்து வந்த காரணம்தான்.

"உன் மாமாவை எப்போது பார்க்கலாம், உமா?" என்றது அவன் குரல்.

"நான் சொல்லுகிறேன். பொறுங்கள்" என்றாள் உமா.

"ஒரு மாத காலமாக நான் பொறுத்துக் கொண்டுதான் இருக்கிறேன்!"

"என்னால் கால வரையறையெல்லாம் சொல்ல முடியாது... சமயம் வரும்போது..."

"சம்மதம்! வருஷங்களானாலும் பரவாயில்லை..."

"கோபித்துக் கொள்கிறீர்களா?... எனக்குத் தாயும் தந்தையும் அவர்கள்தான். அவருடைய தற்போதைய வசதியைத் தெரிந்து கொள்ள வேண்டாமா?"

"எனக்குக் காசு பணம் ஒன்றும் வேண்டாம். ஆகையால்...."

"அவர்களுக்கு ஆசை இருக்காதா?"

ஆள் அரவம் கேட்டது. பேச்சும் கலைந்தது. சுந்தரராமன் எழுந்திருக்காமல் மரத்தடியோடு சாய்ந்து கொண்டு கண்களை மூடிக் கொண்டார். இருட்டில் அவரை யாரென்று பிராகாரத்தில் நடப்பவர்கள் கண்டு கொள்ள முடியாது. சில விநாடிகளில் உமா அவரைத் தாண்டி நடந்து விட்டாள். அவருடைய எண்ணக் குவியலிலே பளிச்சென்று ஒரு மின்னல் மின்னியது. அவளுடன் பேசிய வாலிபன் சப் ரிஜிஸ்திரார் ஆபீஸ் குமாஸ்தா சங்கரன்.

வெகு நேரம் கழித்து எழுந்திருந்த சுந்தரராமன் உணர்ச்சிப் பிரவாகத்தில் மூழ்கி எழுந்தார். ஆனந்தம், பிரமிப்பு, துக்கம் முதலிய உணர்ச்சிகள் அவரை அலை அலையாக மாறித் தாக்கின. முதலில் சங்கரன் ஒரு நல்ல பிள்ளை. ஏழையாக இருந்தாலும் கௌரவமான குடும்பத்தில் பிறந்தவன். தாயார் தகப்பனார் இல்லை. உமாவைக் கல்யாணம் பண்ணிக் கொண்டால் நன்றாக வைத்துக் கொள்வான். எதற்கும் மறு நாள் காலையில் ஜானகியிடம் ஒரு வார்த்தை கேட்டு விட்டுத் தாமே நேரடியாக ஏதாவது ஏற்பாடு பண்ண வேண்டும் என்ற முடிவுக்கு வந்து விட்டார். ஆனால் அவள்தான் அவரை மேலே பேச விடாமலடித்து விட்டாளே!

ஒரு வார காலம் ஓடிவிட்டது. சுந்தரராமன் அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருந்தார். சங்கரனைக்கூட அவர் நேரில் சந்தித்துப் பேசி விட்டார். அவனுக்கு ஒரே பூரிப்பு. தன் கல்யாணத்துக்கான பண்டங்களைச் சேகரிக்க அவன் அன்றே வெளியூர் போய் விட்டான்.

அன்று உமா கோவிலுக்குச் சென்றிருந்தாள். மிகுந்த கோபத்துடன் "ஏய் ஜானகி! இங்கே வா!" என்றார் சுந்தர ராமன். கூடத்திலிருந்து பின் கட்டுப்பக்கம் போகத் திரும்பிய ஜானகி திடுக்கிட்டு நின்றாள்.

"உனக்குச் சம்மதம் உண்டோ இல்லையோ, அதைப் பற்றி எனக்கு அக்கறை கிடையாது! அடுத்த வாரத்திலேயே உமாவுக்குக் கல்யாணம் நடத்துவதாகத் தீர்மானித்து விட்டேன். மாப்பிள்ளையும் அகப்பட்டு விட்டான்" என்றார் கோபாவேசத்துடன்.

"அடுத்த வாரத்திலா?" என்று மாத்திரம்தான் ஜானகி கேட்டாள். அதில் ஆத்திரமோ, பதற்றமோ இல்லை.

"ஆமாம்! அடுத்த வாரத்திலேயேதான். ஏன்? கழுத்திலிருக்கிற அந்தச் சங்கிலியைக் கழற்றிக் கொடுக்க வேண்டுமே என்ற துக்கமோ? பேராசைக்காரி!... நீ தொட்ட சங்கிலி அந்தக் குழந்தைக்கு வேண்டவே வேண்டாம். நான் எல்லா ஏற்பாடுகளும் செய்து விட்டேன். இந்த வீட்டை அடமானமாக வைத்து ரூபாய் வாங்கி, புதுச் சங்கிலியே பண்ணி விட்டேன். மீதி ரூபாயில் கோயில் சன்னதியிலேயே அடக்கமாகக் கல்யாணம். இந்த விஷயத்திலே நீ இனிமேலும் குறுக்கிடக் கூடாது என்பதற்குத்தான் உன்னை எச்சரிக்கிறேன். இந்த விஷயம் உமா காதுக்கு எட்டக் கூடாது. ஜாக்கிரதை!"

"ஐந்து வருஷங்களாக நான் என் மனத்துக்குள்ளே சிறைப்படுத்தி வைத்திருந்த இரகசியத்தைச் சொல்ல என்னை வற்புறுத்துகிறீர்கள். சொல்லி விடுகிறேன். பிறகு நான் பேராசைக்காரியா, இல்லையா என்பதைச் சொல்லுங்கள்!" என்றாள் ஜானகி.

சுந்தர ராமன் திடுக்கிட்டு நிமிர்ந்தார்.

"நீங்கள் வீட்டடமானதுக்கு மறு மாசம் என்று நினைக்கிறேன். உமாவின் சங்கிலியில் ஒரு கண்ணி விட்டுப் போயிருந்தது. அதைச் சீர்ப்படுத்தப் பத்தரிடம் கொண்டு போனேன். அப்போதுதான் அது முலாம் பூசப்பட்ட சாதாரணச் சங்கிலி என்று தெரிந்தது. அதை வெளிப்படுத்தினால் உமாவுக்கு இரண்டு வகைகளில் மன வேதனை ஏற்படும் என்று பயந்தேன். முதலாவது தன் தாயாரை அந்தக் காலத்தில் யாரோ ஏமாற்றி இருக்கிறார்கள் என்ற தாபம் ஏற்படலாம். அல்லது நாமே அவளை வஞ்சிக்க இப்படி ஓர் ஏற்பாடு செய்திருக்கலாம் என்று சந்தேகப்படலாம். இந்த நினைவே அவளுக்குத் தோன்றாமலிருக்க எனக்கு ஒரு வழிதான் புலப்பட்டது. சிக்கனத்தையும் சிறு கைத்தொழிலையும் மூலதனமாகக் கொண்டு அவளுக்கு நல்ல சங்கிலியே பண்ணப் பணம் சேர்க்க வேண்டும். அந்தப் பணம் சேர்ந்த பிறகு அவளுக்கு எங்காவது கல்யாணம் பண்ணி அனுப்பி விடவேண்டும் என்று திட்டம் போட்டேன். இன்று வரை கிட்டத்தட்ட பைசா பைசாவாகவோ அணா அணாவாகவோ ஐந்நூறு ரூபாய் வரை சேர்த்து விட்டேன். ஒரு சங்கிலிக்கும் ஒரு கூறைப் புடவைக்கும் இன்னும் ஐம்பது ரூபாய்கள்தான் வேண்டும். அதற்காகத்தான் காலத்தைத் தள்ளி போட்டுக் கொண்டு வந்தேன். இனிமேல் உங்கள் பொறுப்பு. நீங்கள் என்னை அரக்கியாகவோ பேராசைக் காரியாகவோ கற்பனை செய்து கொள்ளலாம். உங்களுக்கு உரிமை உண்டு. ஆனால் அந்தப் பெண் நம் இருவரையுமே மோசக்காரர்கள் என்று நினைத்து விடக் கூடாது என்பதற்காகத்தான் நான் அஞ்சினேன்." ஜானகி உள்ளே போய் ஒரு பழைய தகர டப்பாவைத் திறந்தவாறு கொண்டு வந்து கணவர் முன்னால் வைத்தாள். உள்ளே நிறையக் கசங்கிய கரன்ஸி நோட்டுக்கள் திணிக்கப்பட்டுக் கிடந்தன.

"ஹும்! ஹும்! எடுத்து உள்ளே வை! இந்தச் சங்கிலியையும் அதோடு வை. உன்னை நான் சரியாகப் புரிந்து கொள்ள வில்லை. ஆத்திரப்பட்டு விட்டேன்..." என்று கூறிக் கொண்டே சுந்தர ராமன் திரும்பினார்.

அவர் கண்களில் ஈரம் படர்ந்தது.

ஜானகி உள்ளே போகத் திரும்பினாள். கைதிக் கூண்டிலிருந்து நிரபராதி என்று விடுதலை பெற்று வெளியேறிய நபரின் மகிழ்ச்சி அவள் முகத்தில் பரவியது.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

பரம்பரை யழகின் கருவூலமாய், கற்பகப் பசும் பொற்
கனியே போல் சிறப்பங் கடைந்த சோப்... தென்
னரும் சந்தனச் சத்தும், வளமார்ந்த வாதுமை
எண்ணெயும் இணங்கி மணந்து... அழியாவரம்
பெற்ற அழகுநிதியை அழைத்துவரும் மகாராணி.




# மகாராணி சந்தன சோப்

**அழகுசாதன சோப்புக்களில் அரசியர்க்கரசி – வாதுமை எண்ணெய் கலந்துள்ள சோப்**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

MHR. 6-X52 TM

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon